

# அம்புலிமாமா

## ஏப்ரல் 1997



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**

# அம்புலிமாமா




நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## பரிசுகளுக்கும் மேலாக...?

ஆண்டு தோறும் சிறுவர், சிறுமியர்களின் வீர தீரச் செயல்களைப் பாராட்டி பணமும், புத்தகங்களும் அளிக்கப்படுகின்றன. இந்த ஆண்டு குடியரசு தின அணி வகுப்பில் பரிசு பெறத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுவர் சிறுமியர் யானைகளின் மீது அமர்த்தப்பட்டு அணியில் வரச் செய்தார்கள். சில நாட்களுக்கு முன்பு பிரதம மந்திரி யும் அவர்களுக்குப் பணத்தையும் புத்தகங்களையும் பரிசு களாக வழங்கினார்.

பணம் விரைவில் செலவாகி விடும். புத்தகங்களும் அவர்களிடம் வெகு நாட்கள் இராமல் கிழிந்தும் போக லாம். இவர்களுக்கு நிரந்திரமாய் நினைவிலிருக்கும்படி யான உதவிகளை அரசாங்கம் செய்ய வேண்டும். இவர்கள் 5லிருந்து 15 வயதிற்குள் இருக்கும் நடுத்தர ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே அநேகமாக இருக் கிறார்கள்.

எனவே தம் உயிரையும் பொருட்படுத்தாமல் தீரச் செயல்களைப் புரிந்த இவர்கள் தொடர்ந்து தம் மேற் படிப்பைப் படிக்க உபகாரச் சம்பளமும் மற்ற வசதிகளும் செய்து கொடுப்பதுதான் இவர்களுக்கு உரிய மதிப்பை அளித்ததாக இருக்குமல்லவா? நம் அரசு இதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

**மதிமுகம்: 100** **ஏப்ரல் 1997** **புன்னகை: 4**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



செய்திகளும் தகவல்களும்

# பங்களாதேஷின் தேசபிதா

பங்களாதேஷ் தோன்றி இருபத்தைந்து ஆண்டுகள் முடிவடைந்தன. அதனால் அண்மையில் அந்நாட்டில் அதற்கு வெள்ளி விழா கொண்டாடப்பட்டது. இவ்விழா நடந்த இரண்டு மாதங்களுக்குப் பின் பங்களா தேஷ் தோன்றப் போராட்டம் நடத்திய ஷேக் முஜிபுர் ரஹ்மான் 'தேச தந்தை' என அந்நாட்டு அரசு அறிவித்து கௌரவித்தது. அதற்கு முன் பங்களாதேஷ் கிழக்குப் பாகிஸ்தான் என்ற பெயரில் பாகிஸ் தானின் வசம் இருந்தது. அதை விடுவித்து அதற்கு சுதந்திரம் வாங்கித் தந்த தலைவர் என முஜிபுர் ரஹ்மான் உலகப் புகழ் பெற்றார்.

இந்தியா 1947ல் இரண்டாகப் பிரிக்கப் பட்ட போது முஸ்லீம்கள் பெரும்பான்மையாக இருந்த பகுதி பாகிஸ்தான் என ஏற்படுத்தப் பட்டது. அதன்படி தற்போதைய பங்களாதேஷ் அப்போது கிழக்குப் பாகிஸ்தான் எனப் பெயரிடப்பட்டு பாகிஸ்தானுடன் சேர்க்கப் பட்டது. ஆனால் ஆரம்ப முதலே அப்பகுதி மக்கள் அதை விரும்பாமல் தங்களது 'சோனார் பங்களா' எப்போது அமையும் என்று ஏங்கிக் கொண்டிருந்தார்கள்.

இது கண்டு பாகிஸ்தான் இந்தப் போராட்டத் திற்குத் தலைமை தாங்கிய 'வங்க பந்து' ஷேக் முஜிபுர் ரஹ்மானையும் அவரது கூட்டாளிகளை யும் சிறையில் அடைத்து அடக்கு முறையைக் கையாண்டது. பாக் அதிகாரிகளின் கொடுமை களைத் தாங்க முடியாமல் அப்பகுதி மக்கள் அண்டையிலுள்ள மேற்கு வங்காளம், திரிபுரா, மேகாலய், அஸ்ஸாம் ஆகிய இந்தியப் பகுதி களுக்கு அகதிகளாக லட்சக்கணக்கில் வரலாயி னர். அந்த அகதிகளை பாரதநாடு வரவேற்ற போதிலும் அவர்களை நீண்ட நாட்களுக்கு அங்கு வைத்திருக்க முடியாது என்ற காரணத்தால் இந்தியா அப்பிரச்னைக்கு ஒரு தீர்வு காண முடிவு செய்தது. எனவே பங்களாதேஷ் விடுதலை வீரர்களுக்கு இந்தியா உதவி அளித்து பலப் பிரயோகம் செய்ய வேண்டிய நிலைக்குத் தள்ளப் பட்டது.

இந்தியா பாகிஸ்தான் போர் 1971ல் பதினேழு நாட்கள் நடந்தது. டிசம்பர் 16ல் பாகிஸ்தான் படை தோற்றது. பாகிஸ்தானிலிருந்து கிழக்குப் பாகிஸ்தான் விடுதலை பெற்று பங்களாதேஷ் தோன்றியது. ஷேக் முஜிபுர் ரஹ்மான் விடுதலை செய்யப்பட்டார். 1972ல் அவர் தம் நாட்டின் ஆட்சித் தலைவரானார். ஆனால் 1975ல் அவரும் அவரது குடும்பத்தினரும் கொலை செய்யப் பட்டனர். அப்போது ஜெர்மனியிலிருந்த அவரது இரு புதல்வியர் மட்டும் உயிர் தப்பினார்கள். அவர்களில் மூத்தவரான ஷேக் ஹசீனா வாஜித் 1981ல் இங்கிலாந்திலிருந்து தம் தாய்நாட்டிற்கு வந்து அரசியல் களத்தில் குதித்தார். அவரது தந்தை நிறுவிய அவாமிலீகின் தலைமையை ஏற்று 1996ல் நடந்த பொதுத் தேர்தலில் தம் கட் சியை வெற்றி பெறச் செய்தார். இதனால் அவர் பங்களாதேஷின் பிரதம மந்திரியும் ஆனார்.

பங்களாதேஷின் அரசியல் நிர்ணய சட்டத் தின் நான்காவது பகுதி ஷேக் முஜிபுர் ரஹ்மானை தேச பிதா என அறிவித்து கௌரவித்திருந்தது. ஆனால் 1979ல் ராணுவ ஆட்சியாளர்கள் அந்தப் பிரிவை ரத்து செய்தார்கள். ஆயினும் மக்கள் ஷேக் முஜிபுர் ரஹ்மானை நாட்டின் பெருந் தலைவர் எனவே கருதினர். பங்களாதேஷ் நாடாளும் மன்ற அவைத் தலைவர் பிப்ரவரி 19ல் ஷேக் முஜிபுர் ரஹிமானை அதுவரை தக்க முறையில் கௌரவிக்காது இருந்தது அரசியல் அதிகார துஷ்பிரயோகம் என அறிவித்தார்.

பங்களாதேஷ் டிசம்பர் 16ல் வெள்ளி விழா கொண்டாடியது. 1972ல் ஷேக் முஜிபுர் ரஹ்மான் நாட்டின் விடுதலையை அறிவித்த இடத்தில் தற்போதைய பிரதம மந்திரி ஷேக் ஹசீனா வாஜித் விடுதலைப் போர்க்கம்பத்திற்கான அடிக்கல்லை நாட்டினார்.

அன்றே நம் நாட்டிலும் பங்களாதேஷ் வெற்றி நாள் கொண்டாடப் பட்டது. நம் குடியரசுத் தலைவர் டாக்டர் சங்கர் தயாள் சர்மா ராணுவ மரியாதையை ஏற்றுக் கொண்டார்.





# மாறிய மூவர்

சபாபதி, பசுபதி, உமாபதி ஆகிய மூன்று சகோதரர்கள் தம் தந்தை தமக்கு விட்டுப் போன வீட்டை மூன்று பகுதிகளாக்கித் தனித் தனியாகக் குடித்தனம் செய்து வந்தார்கள். அவர்கள் பிறருக்கு உதவி செய்வது பற்றி யோசியாமலும் தம்மைப் பற்றி மட்டும் நினைத்து வந்தார்கள்.

ஒருநாள் அவர்கள் வாழும் வீட்டின் முன் ஒரு சாது நின்று ''அம்மா! அன்னம் கொடுங்கள்'' என்று குரல் கொடுத்தார். அப்போது மூன்று சகோதரர்களும் வீட்டில் இருக்கவில்லை. எங்கோ போயிருந்தார்கள். அவர்களது மனைவிகள் சாதுவின் குரல் கேட்டு தம் பகுதிகளிலிருந்து வெளியே வந்து பார்த்தார்கள். அவர்களைப் பார்த்ததும் மீண்டும் சாது ''அம்மா! அன்னம் கொடுங்கள்'' என்று கூறினார்.

அப்போது சபாபதியின் மனைவி சிவகாமி ''ஐயா! நீங்கள் இந்த ஊருக்கு புதிதா? உங்களுக்கு இந்த வீட்டைப் பற்றித் தெரியாது போலிருக்கிறது. இங்கு யாரும் பிறருக்கு உதவ மாட்டார்கள். எதுவும் கொடுக்க மாட்டார்கள்'' என்றாள் மற்ற இரு பெண்மணிகளும் அவள் கூறியது சரியே என்பது போலத் தலையை ஆட்டினார்கள்.

அப்போது சாது ''அம்மா! நான் ஒவ்வொரு வீடாகப் போய் பிச்சை கேட்பனல்ல. எந்த வீடு எனக்குப் பிடிக்குமோ அங்குதான் போவேன். எனக்கு அன்னமிட்டால் உங்களுக்கு நல்லதே நடக்கும்'' என்றார். அதைக் கேட்ட பசுபதியின் மனைவி மீனாட்சி ''ஐயா சாதுவே! உங்களைப் போலப் பல சாதுக்கள் இப்படிச் சொல்லி எவ்வளவோ பேர்களை ஏமாற்றி இருக்கிறார்கள். அவர்களைப் போல நாங்கள் ஏமாறத் தயாராக இல்லை'' என்றாள்.

சாதுவும் ''உங்கள் மூவர் வீட்டிலும் புதையல்கள் இருக்கின்றன

—சிவனார் செல்வன்—

இதைச்சொல்லவே சாப்பாடு கேட்டு வந்தேன்'' என்றார். புதையல் என்றதும் சிவகாமியும் மீனாட்சியும் உமாபதியின் மனைவி பார்வதியும் ஆச்சரியத்தோடு திகைத்து நின்றனர். மூவருமே சாதுவிடம் அவர் தங்கள் வீட்டிற்கு வந்து சாப்பிடும்படி வற்புறுத்தினார்கள்.

சாதுவும் அவர்கள் மூவரையுமே உணவைக் கொண்டு வரச் சொல்லி அதைச் சாப்பிட்டவாறே அவர்களது கணவன்களைப் பற்றிய விவரங்களை அறிந்து கொண்டார். அவர்கள் மூவரும் சாது சாப்பிட்ட பின் ''எங்களுக்குப் புதையல்கள் எப்போது கிடைக்கும்?'' என்று கேட்டார்கள்.

சாதுவும் ''உங்கள் கணவன்மார்கள் மூவரும் மூன்று நற்செயல்களைச் செய்துவிட்டால் உடனேயே உங்கள் பகுதிகளிலேயே உங்களுக்குப் புதையல்கள் கிடைத்து விடும்'' என்றார். அப்போது அம் மூவரும் ''எங்கள் வீட்டுக்காரர்கள் நல்ல செயல்கள் புரிய மாட்டார்களே. பிறருக்கு உதவுவதையே வெறுப்பவர்கள் அவர்கள். உங்களுக்கு நாங்கள் உணவளித்ததை அறிந்தால் அவர்கள் எங்களை வாட்டி வதைப்பார்கள். அவர்களது குணம் அப்படிப்பட்டது'' எனக் கவலையோடு கூறினார்கள்.

சாதுவும் சற்று யோசித்துவிட்டு ''கவலைப்படாதீர்கள். அவர்களுக்கு நல்ல குணத்தை அளிக்க உங்களுக்கு ஒவ்வொரு மாத்திரை கொடுக்கிறேன். நீங்கள் அந்த மாத்திரைகளை குடிக்கும் தண்ணீரில் போட்டுக் கரைத்து அந்த நீரை உங்கள் கணவன்மார்களுக்குக் கொடுத்து குடிக்க வையுங்கள்.



அதன் பிறகு அவர்களது குணம் மாறிப் பிறருக்கு உதவுவார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் முதலில் ஒரு நற்செயலைச்செய்ததும். உங்களுக்கு உங்கள் பகுதியில் புதையல்கள் கிடைக்கும். இன்று நீங்கள் மாத்திரையை கொடுத்து அவர்களைக் குடிக்க வைத்தால் நாளையே நற்செயல்கள் புரிவார்கள். நாளை இரவிற்குள் உங்களுக்குப் புதையல்களும் கிடைக்கும். நான் இன்னமும் மூன்று நாட்கள் இந்த ஊரில் தான் இருப்பேன். புதையல்கள் கிடைத்த பின் வந்து என்னைப் பாருங்கள்'' என்று கூறி அவர்களுக்கு ஆளுக்கு ஒரு மாத்திரை கொடுத்து விட்டுச் சென்றார்.

மூன்று பெண்மணிகளும் அன்றிரவே தம் கணவன்மார்களுக்குக் குடிக்க நீர் கொடுத்த போது அதில்



சாது கொடுத்த மாத்திரைகளைப் போட்டுக் கரைத்துக் கொடுத்தார்கள். மறுநாள் விடியற் காலையிலேயே சபாபதி தூக்கம் கலைந்து எழுந்து விட்டான். அவன் தன் வீட்டிலிருந்து வெளியே வந்து பார்த்த போது தெரு முனையில் காவல் வீரர்கள் அண்ணாமலையைப் பிடித்துக் கொண்டு நிற்பதைக் கண்டு அங்கு சென்றான்.

அண்ணாமலை கண்ணீர் விட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு சபாபதி காவல் வீரர்களிடம் என்ன விஷயம் என்று கேட்டான். அவர்களும் ''இவன் எல்லோரிடமும் கடன் வாங்கி வீடு நிலம் என்றெல்லாம் தன் மனைவி பேரிலும் மகன்கள் பேரிலும் வாங்கி விட்டான். கடன்காரர்கள் தம் கடனைக் கேட்க இவன் தன்னிடம் பணமில்லை என்றதால் இவனை சிறைக்கு இழுத்துப் போகிறோம்'' என்றார்கள்.

சபாபதியும் ''சிறையில் அடைத்து விட்டால் மட்டும் இவனால் கடனைத் தீர்த்து விட முடியுமா?'' என்று கேட்க வீரர்களும் ''இவன் நூறு ரூபாய் ரொக்க ஜாமீன் கட்டி வெளியே வந்து ஏதாவது வேலை செய்து கடனை அடைக்கலாம். ஆனால் ரொக்க ஜாமீன் கட்டக் கூட இவனிடம் பணம் இல்லையாம்'' என்றார்கள்.

சபாபதியும் ''அட பாவமே! நூறு ரூபாய் இல்லாததால் ஒரு மனிதன் சிறையிலா இருக்க வேண்டும்? நான் இவனுக்காக நூறு ரூபாய் ரொக்கமாக ஜாமீன் கட்டுகிறேன். இவனை விட்டு விடுங்கள்'' எனக் கூறி தன் வீட்டிற்குப் போய் நூறு ரூபாய் எடுத்து வந்து காவல் வீரர்களிடம் கொடுத்தான். காவல் வீரர்களும் அண்ணாமலையை விட்டுச் சென்றார்கள்.

சபாபதி அதன் பின் அண்ணாமலையையும், அவனது மனைவி மக்களையும், கடன்காரர்களையும் ஓரிடத்தில் கூட்டி அறிவுரைகளைக் கூறினான். அண்ணாமலையின் மனைவியும், மகன்களும் தாம் அண்ணாமலையை விடுவிக்க முயலாமல் இருந்ததற்காக வெட்கப்பட்டார்கள். அவரின் கடனைத் தாமே தீர்த்து விடுவ தாக அவர்கள் வாக்களித்துப் பத்திரமும் எழுதிக் கடன்காரர்களிடம் கொடுத்தார்கள். மேலும் சபாபதி ஜாமீன் கட்டிய பணம் நூறு ரூபாயையும் அவர்கள் அவனுக்குத் திருப்பிக் கொடுத்தார்கள். கடன்காரர்களும் இதனால் திருப்தி அடைந்து பத்திரங்களை எடுத்

துக் கொண்டு அங்கிருந்து சென்றனர்.

அப்போது அண்ணாமலையின் மனைவி சபாபதியிடம் ''ஐயா! நீங்கள் என் கணவரின் விரோதி ஆயிற்றே. அந்த விரோதத்தின் காரணமும் தப்பும் என் கணவருடையதுதான் என்று எனக்கு நன்றாகத் தெரியும். அப்படி இருந்தும் நீங்கள் என் கணவருக்கு இப்படிப்பட்ட மேலான உதவி செய்தீர்களே. நீங்கள் தாம் எவ்வளவு நல்லவர்! கணவன் சிறைக்கு இழுத்துச் செல்லப்பட்ட போது நான் ஒன்றும் செய்யாமல் இருந்தேனே என்று எண்ணி என்னை மட்ட ரகமாக நினைத்து விட வேண்டாம். என் கணவர் சிறைப்பட்டாலும் கடனைத் தீர்க்கப் போவதில்லை என்று பிடிவாதமாக இருந்தார். அதனால் தான் எதுவும் செய்ய முடியாமல் நாங்கள் இருந்தோம். பகைவனுக்கும் அருளும் தங்கள் நல் நெஞ்சைக் கண்டு என் கணவரின் மனமும் மாறி விட்டது. அவரும் கடன்காரர்களுக்குப் பத்திரம் எழுதிக் கொடுக்கச் சொன்னார். இவ்வளவு சிரமப்பட்ட உங்களுக்கு நாங்கள் என்றென்றும் கடன்பட்டிருக்கிறோம்'' என்றாள்.

அண்ணாமலையும் சபாபதியிடம் தன் தவறுக்கு மன்னிப்புக் கோரினான். இனி என்றும் அவனுடன் நட்புடன் இருப்பதாக கூறவே, சபாபதியும் மகிழ்ந்து போய்த் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தான்.

அதே நாளில் பசுபதியும் ஒருவருக்கு உதவி புரிந்தான். மூன்று சகோதரர்களில் அவன் உடல் வலிமை மிக்கவன். அவனது வீட்டின் எதிர் வீட்டில் ஒரு கிணறு தோண்டிக் கொண்டிருந்



தார்கள். அப்போது ஒரு பாறை தடையாக இருந்து ஊற்று வராமல் குறுக்கே இருந்தது. சம்மட்டியால் பலமாக அடித்தால் நகர்த்திவிட முடியும். அவ்வளவு பலம் கொண்டவர்கள் கிணறு தோண்டுபவர்களில் யாரும் இருக்கவில்லை.

அது பற்றிக் கேள்விப்பட்ட பசுபதி தான் அயலூருக்குப் போக வேண்டிய முக்கியமான வேலை பற்றிக் கூடக் கவலைப்படாமல் எதிர் வீட்டிற்குச் சென்றான். கிணறு தோண்டுபவர்கள் பள்ளத்துள் இருக்கும் அந்தப் பாறையை எப்படி அசைத்து நகர்த்துவது என்பது பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். பசுபதி அவர்களிடமிருந்து சம்மட்டியை வாங்கிக் கொண்டு கிணற்றினுள் இறங்கினான். சம்மட்டி கொண்டு அந்தப் பாறை மீது



அவன் அடிக்கவே அது பெயர்ந்து வந்ததோடு சுக்கல் சுக்கலாகவும் ஆகி விட்டது. ஊற்றுக் கண் திறந்து 'கட கட' வென்று நீர் வரலாயிற்று.

இதைச் செய்துவிட்டு திரும்பியது டன் பசுபதி கிணற்றிற்கு வெளியே வந்து தன் வேலையை கவனிக்கச் சென்றான். அதே நாளில் உமாபதியும் ஒரு நல்ல வேலையைச் செய்தான். கூலி வேலை செய்யும் குப்பனைப் பாம்பு கடித்து விட்டது. அதற்கு அந்த ஊரில் வைத்தியர் இருந்தும் அவரிடம் மருந்து இல்லை. அது அடுத்துள்ள நகரில் ஒரே ஒரு வைத்தியரிடம் தான் இருந்தது. அங்கு போவதென்றால் ஒரு நாளாகிவிடும். உள்ளூர் வைத்தி யன் விஷம் பரவாதிருக்கக் கட்டுப் போட்டு தன்னிடமிருந்த மருந்தையும் கொடுத்து 'இவனை இப்போதே பக்கத்து நகருக்கு நான்கு மணி நேரத்துள் கொண்டு சென்று அந்த வைத்தியரிடம் காட்டினால் தான் பிழைப்பான்'' என்றான்.

அவ்வூர் கிராம அதிகாரியிடம் மிக வேகமாகச் செல்லக் கூடிய குதிரை ஒன்று இருந்தது. அதன் மீது குப்பனைப் போட்டுக் கொண்டு வேகமாக ஓட்டினால் அவனைப் பிழைக்க வைக்கலாம் அப்படி வேகமாகச் செல்ல கூடியவன் உமாபதி ஒருவனே. உமாபதி ஒரு வார காலமாக வயிற்று வலியால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தான். ஆனால் ஒரு உயிரைக் காப்பாற்ற தன் உதவி தேவைப்படுகிறது என அறிந்ததும் தன் வலியையும் பொருட்படுத்தாமல் கிராம அதிகாரியிடமிருந்து குதிரையைக் கேட்டு வாங்கி, குப்பனைத் தூக்கி அதன் மீது கிடத்தி தானும் அதன் மீது ஏறி அமர்ந்து அவன் நகரிலுள்ள வைத்தியரின் வீட்டிற்குச் சென்றான்.

அந்த வைத்தியரும் விஷக்கடி போகும் மருந்தைக் குப்பனுக்குக் கொடுத்து அவனை பிழைக்க வைத்தார். அத்துடன் உமாபதியின் வயிற்று வலிக்கும் மருந்து கொடுத்து உடனேயே வலி போகச்செய்தார். வைத்தியரும் மற்றவர்களும் உமாபதியைப் பாராட்டினார்கள். அவனும் குப்பனோடு ஊர் திரும்பினான். அவ்வூராரும் அவனது பரோபகாரச் சிந்தையைப் புகழ்ந்தார்கள்.

இவ்விதமாய் தம் கணவன்கள் அன்று நல்ல வேலைகளைச் செய்து பிறருக்கு உதவியது கண்டு மூன்று பெண் மணிகளும் மகிழ்ந்து போனார்கள். அதன் பின் அன்று மாலை தம்

வீட்டுப் பின்புறங்களில் அவர்கள் தோண்டிப் பார்த்தார்கள். உமாபதிக்கு செப்புக் காசுகள் நிறைந்த குடம் கிடைத்தது. பசுபதிக்கு வெள்ளி நாண யங்கள் நிறைந்த குடம் கிடைத்தது. சபாபதிக்குத் தங்க நாணயங்கள் நிறைந்த குடம் கிடைத்தது.

சிவகாமி மிகவும் சந்தோஷப்பட்டாள். மீனாட்சியும் பார்வதியும் வருத்தமாக இருந்தார்கள். அவர்கள் உடனேயே கிளம்பிப் போய் சாதுவைத் தேடிக் கண்டு பிடித்தார்கள். பார்வதி அவரிடம் புதையல்கள் கிடைத்விதத்தைக் கூறி ''மூவரும் நற் செயல்களைத் தானே செய்தார்கள்? மூவருக்கும் உங்கள் மாத்திரைகளால்தான் நற்புத்தியும் வந்தது. அப்படி இருக்க பலன் மட்டும் ஏன் மாறுபட்டது?'' என்று கேட்டாள்.

சாதுவும் ''என் மாத்திரை தற்காலிக நற்புத்தியையே அளித்தது. அதன் பின் ஏற்பட்ட பலன் அவரவர் அறிவைப் பொறுத்தே கிடைத்தது! உமாபதி நற்செயல் புரிந்த ஒரு மனிதனின் உயிரைக் காப்பாற்றினான். ஆனால் என் மாத்திரையின் சக்தி மறைந்ததும் அவன் தன் மனதில் இனி ஒருநாளும் இம்மாதிரி வேலை செய்யக்கூடாது எனத் தீர்மானித்தான். அதனால் செப்புக் காசு அவன் பங்கிற்குக் கிடைத்தது. பசுபதியோ தனக்கு நேரம் இருந்தால் இனிப் பிறருக்கு உதவி புரியலாம் என எண்ணினான். அதனால் வெள்ளிக் காசுகள் அவனுக்குக் கிடைத்தன. சபாபதியோ இனிமேல் எப்போதும் இது போன்ற நற் செயல்கள் புரிய வேண்டுமென நினைத்தான். அதனால் அவனுக்குத் தங்கக் காசுகள் கிடைத்தன'' என்றார்.

இதைக்கேட்டு அந்த மூன்று பெண்மணிகளும் தம் வீட்டிற்கு வந்தார்கள். அவர்களது கணவன்கள் தங்க நாணயங்களை அவர்களிடம் காட்டி ''அண்ணா சபாபதி இந்த வீட்டில் எது கிடைத்தாலும் மூவரும் அதனை சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும் என்றார். அதனால் எங்கள் ஒவ்வொருவரிடமும் தங்கக் காசுகளும், வெள்ளிக் காசுகளும், செப்புக் காசுகளும் சமமாக உள்ளன'' என்றார்கள்.

அப்போதே மூவரும் எப்போதுமே நற்செயல்களைச் செய்து வருவது என நற்புத்தி கொண்டவர்களாகத் திருந்தி விட்டார்கள்.



# பரிசு ஆறுதல் அளித்ததா?

தலைநகரில் ஒவ்வொரு ஆண்டிலும் சித்திரம் வரையும் போட்டி நடப்பது உண்டு. இளம் கலைஞர்கள் அதில் கலந்து கொண்டு சித்திரங்களை வரைந்து காட்ட அவர்களுக்குப் பரிசுகளும் கிடைத்து வந்தன.

வழக்கம் போல அந்த ஆண்டிலும் சித்திரம் வரையும் போட்டி நடந்தது. அதில் பல இளம் கலைஞர்கள் கலந்து கொண்டு தம் திறனைக் காட்டி படங்களை வரைந்து கொடுத்தார்கள். படங்கள் பரிசுகளுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டன. அவற்றை வரைந்த கலைஞர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. கலையரசு என்ற இளைஞனுக்கு ஆறுதல் பரிசுதான் கிடைத்தது.

அவன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு தன் ஊருக்குப் போனான். அங்கே அவனது நண்பன் அவனைக் கண்டு ''அரசு! உனக்குப் போட்டியில் ஆறுதல் பரிசு கிடைத்ததாமே... அப்படி இருந்துமா தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான்.

கலையரசும் ஆத்திரத்துடன் ''அதுவா ஆறுதல் பரிசு? நீயே பார் பரிசாகக் கிடைத்த அந்தப் புத்தகத்தை'' என்று கூறித் தன் நண்பன் முன் ஒரு புத்தகத்தை விட்டெறிந்தான். நண்பனும் அதை எடுத்துப் பார்த்தான். அதன் அட்டையில் ''சித்திரம் வரைவது எப்படி?'' என்றிருந்தது.





# மாமன்னர் அசோகர்

## 3

சந்திர குப்தன் சாணக்கியரின் உதவியால் நந்தர்களை வென்று மகதத்தைக் கைப் பற்றினான். மௌரிய வம்சத்தை நிறுவி பாடலிபுத்திரத்தைத் தலைநகராகக் கொண்டு அவன் ஆண்டான். அவனுக்குப் பின் அவனது மகன் பிந்துசாரன் அரியணை ஏறினான். அவன் நன்கு ஆட்சி புரிந்து மூன்று மனைவிகளோடு நான்காவது மனைவியாக சுபத்திரா என்ற பிராம்மணப் பெண்ணை மணந்து கொண்டான். அவர்களுக்குப் பிறந்தவன் அசோகன். படிப்பிலும் அறிவிலும் சிறந்து விளங்கிய அசோகனை பிந்துசாரனின் மூத்த மகனான சுசிம்மன் வெறுத்து வந்தான். அச்சமயம்—

ஒருநாள் காலை அசோகன் தன் தாயின் விருப்பப்படி மலர்களையும் கனிகளையும் கொய்து கொண்டு நகரின் நடுவேயுள்ள ஆலயத்திற்குச் சென்றான். அங்கு கடவுளை வழிபட்டு விட்டு வெளியே வந்தான். அப்போது பறவைகளின் கீச் கீச் சென்ற சத்தமும் ஆலய மணியின் ஓசையும் தான் கேட்டது. எங்கும் நிசப்தம் பரவி இருந்தது. அந்த இனிய ஒலியையும் காலைக் கதிரவன் உதிக்கும் காட்சியையும் ரசித்தவாறே அவன் நடந்து சென்று கொண்டிருந்தான்.

சற்று நேரத்திற்குப் பின் ஒரு குதிரை அவன் பின்னால் வேகமாக வந்தது. அது அசோகனை கீழே தள்ளி விட்டுச் செல்லவே அதன் மீது சுசிம்மன் அமர்ந்து மிடுக்காகப் பார்த்துக் கொண்டே செல்வதை அவன் கண்டான். மறு விநாடியே அவன் எழுந்து ஓடி ஒரே தாவில் சுசிம்மன் அமர்ந்திருந்த குதிரையின் முதுகில் குதித்து

சுசிம்மன் கையில் பிடித்திருந்த கடிவாளத்தைப் பிடுங்கிப் பிடித்துக் கொண்டு அக்குதிரையை நிறுத்தினான். சுசிம்மன் குதிரையிலிருந்து கீழே குதிக்க வேண்டியதாயிற்று.

''என் வழியே நான் போய்க் கொண்டிருக்கும் போது என்னை ஏன் கீழே தள்ளினாய்?'' என்று அசோகன் கோபத்தோடு கேட்டான். அதற்கு சுசிம்மன் ''உன்னைக் கீழே தள்ளியது நானல்ல. என் குதிரை'' என்று கேலியாகக் கூறி தன் குதிரை மீது ஏற முயன்றான். அசோகன் அவனது கையைப் பிடித்து குதிரை மீது ஏற விடாமல் தடுத்து ''இவ்வளவு அகலமான பாதையில் மக்கள் நடமாட்டம் இல்லாது இருக்கும் போது கூட குதிரைச் சவாரி செய்யத் தெரியாத உனக்குக் குதிரை ஒரு கேடா? யார் உன்னை இப்படிப் போக அனுமதித்தார்கள்?'' என்று கேட்டான்.

சுசிம்மனும் ''எனக்கு யார் அனுமதி கொடுக்க வேண்டும்? நான் யார் தெரியுமா?'' என்று எரிச்சலடைந்து கேட்டான். அசோகனும் ''ஓ! தெரியும். மண்டைக் கர்வம் பிடித்து அலைபவன் நீ. என் அண்ணன் என்பதால் இப்போது விட்டு விடுகிறேன். வேறு யாராவது இருந்திருந்தால் நடப்பதே வேறு'' என்றான். சுசிம்மனோ ''வருங்கால இளவரசனாகிய என்னை எதிர்த்தா பேசுகிறாய்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டான்.

அசோகனோ ''இன்னமும் இளவரசன் யாரென்றே தீர்மானமாகவில்லை. ஏன் வீணாகத் துள்ளுகிறாய்?'' என்று கூறவே சுசிம்மன் ''விஷயம் தெரியாமல் பேசாதே.



மன்னரும் மற்ற பெரியவர்களும் என்னைத்தான் இளவரசனாகத் தேர்ந்தெடுத்து இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். உனக்குத் தெரியாது போலிருக்கிறது'' என்று கூறிப் பலமாகச் சிரித்தான்.

அசோகனோ ''நீ சொல்வது பச்சைப் பொய். ஒருவேளை அப்படித் தீர்மானிக்கப் பட்டிருந்தால் அதை நடக்க விடமாட்டேன்'' என்றான். அப்போது சுசிம்மன் ''மன்னரின் தீர்ப்பையா நீ எதிர்க்கிறாய்?'' என்று கூறி அவனை அடிக்கக் கையை ஓங்கினான். அசோகன் அவனது கையைப் பிடித்து முறுக்கவே அவன் ஓவென அலறலானான் அவனது கூக்குரல் கேட்டு அங்கு பலர் ஓடி வந்தார்கள்.

அரச குமாரர்கள் இன்னமும் சிறுவர்களல்ல. வளர்ந்து பெரியவர்



களாகி விட்டார்கள். அவர்களைப் பரீட்சிக்கச் சொன்ன சாணக்கியரும் இறந்து விட்டார். பிந்துசாரனுக்கும் வயதாகி விட்டது. அரசகுமாரர்களின் போட்டி மனப்பான்மையை மக்கள் அறிந்திருந்தனர். அது இவ்வளவு பயங்கரமாக ஆகியதை இதுவரை அவர்கள் காணவில்லை. அவர்களது சண்டையை எல்லோரும் பார்த்துக் கொண்டு நின்றார்களேயொழிய யாரும் அதில் தலையிடவில்லை.

அப்போது கல்லாடகன் குதிரை மீது அமர்ந்து அவ்வழியே வந்து கொண்டிருந்தான். சாணக்கியருக்குப் பின் அவன்தான் நாட்டின் பிரதம மந்திரியானான். அவனைக்கண்டதும் அரச குமாரர்கள் இருவரும் சண்டை போடுவதை நிறுத்திச் சற்று விலகி நின்றார்கள்.

அவன் அவர்களைப் பார்த்து ''நடுத் தெருவில் நாலு பேர் பார்க்க நீங்கள் இருவரும் சண்டை போட்டதை அறிந்தால் மன்னர் எவ்வளவு வேதனைப்படுவார் தெரியுமா?'' என்று கேட்டான். அசோகன் எதுவும் கூறாமல் மௌனமாக நின்றான். சுசிம்மனோ ''நான் யாருக்கும் பயப்படப் போவதில்லை. நீங்களே சொல்லுங்கள். நான்தானே இளவரசன்?'' என்று கேட்டான்.

கல்லாடகனும் ''இதுபற்றி எதுவும் தீர்மானமாகவில்லை. ஆனால் மன்னரின் மூத்த மகன் என்ற முறையில் நீ பெருந்தன்மையோடு நடந்து கொள்ள வேண்டாமா?'' என்று கேட்டான். ''என் அந்தஸ்திற்கு மரியாதை கொடுக்கும்படி நான் இவனிடம் கூறினேன். அது தவறா?'' என்று கேட்டான் சுசிம்மன்.

கல்லாடகனும் ''பிறரை வற்புறுத்தி அவமதிப்பதால் உன் அந்தஸ்து உயர்ந்து விடாது உன் நல் நடத்தை கண்டு யாவரும் உனக்கு மதிப்பு தர வேண்டும். சகிப்புதன்மை உன்னிடம் இருக்க வேண்டும். அற்ப விஷயங்களுக்கெல்லாம் இப்படி நடந்து எல்லோரும் கேலி செய்ய இடம் கொடுக்கக்கூடாது'' என்று கம்பீரக் குரலில் அறிவுரைகள் கூறினான்.

சுசிம்மனும் ''நானொன்றும் பிறர் நகைக்க எதுவும் செய்யவில்லை. கொஞ்சம் தப்பியதால் அந்தத் திமிர் பிடித்தவன் என்னிடமிருந்து தப்பி விட்டான். அவன் மட்டும் சரியாக என்னிடம் கிடைத்திருந்தால் அவன் தோலை உரித்து உப்புத் தடவி இருப்பேன். அப்போது மக்கள் அவனைப்

பார்த்துக் கை கொட்டிச் சிரித்திருப் பார்கள்'' என்றான் கர்வமாக.

கல்லாடகனும் ''அரசகுமாரா! உன் சகோதரனைப் பற்றி இப்படிப் பேசுவது சரியல்ல. அவனும் உன் போல அரசகுமாரனே. உன் தந்தையின் மகன்'' என்றான். சுசிம்மனோ ''இவன் என் தந்தையின் மகனானாலும் இவனது தாய் விவாகத்திற்கு முன் வேலைக்காரியாக என் தாய் இட்ட வேலைகளைச் செய்தவள்தானே'' எனக் கூறி இகழ்ந்தான். அதைக் கேட்ட அசோகன் அவன் மீது பாயப் போனான். ஆனால் பிரதம மந்திரி அவனைத் தடுத்தான்.



அப்போது அசோகன் ''இளவரசுப் பட்டத்திற்குத் தகுதி பெற்றவன் நீயா அல்லது நானா என்பதைக் காலம் தான் தீர்மானிக்கும். ஆனால் என் தாயை அவமதித்த உன்னை நான் பழி வாங்கவே போகிறேன். இது என் சபதம். பிரதம மந்திரியாரே! பொது மக்களே! நன்கு கேட்டுக் கொள்ளுங்கள். மகத நாட்டின் அரியாசனத்தில் இவன் அமரப் போவதில்லை. ஆனால்...'' என்று மேலும் சொல்லப் போகையில் மந்திரி அவனது வாயைப் பொத்தி ''மகாராஜா பிந்துசாரரின் தரப்பில் நான் கட்டளை இடுகிறேன். நீங்கள் இருவரும் இப்போதே அரண்மனைக் குப் போக வேண்டும்'' என்று கடுமையாகக் கூறினான். பிறகு கூடி இருந்த மக்களைப் பார்த்து ''நீங்களும் கலைந்து செல்லுங்கள்'' என்று அவன் அதிகாரக் குரலில் கூறவே எல்லோரும் அங்கிருந்து சென்றனர்.

அரசகுமாரர்களும் சென்ற பின் பிரதம மந்திரி தன் இல்லத்தை அடைந்த போது அரசனின் வீரன் ஒருவன் வந்து ''மன்னர் தங்களை கண்டு பேச வேண்டுமாம். அதுவும் இப்போதே'' எனவே பிரதம மந்திரியும் உடனே அரண்மனைக்குச் சென்று மன்னன் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் அந்தரங்க அறைக்குள் சென்றான்.

மன்னன் அந்த அறையில் ஒரு ஆசனத்தில் சாய்ந்து அமர்ந்திருந்தான். அவனெதிரே ஒரு அதிகாரி நின்று கொண்டிருந்தான். பிரதம மந்திரி உள்ளே நுழைந்து மன்னனை வணங்கியதும் அவன் மந்திரியை ஒரு ஆசனத்தில் அமரச் சொன்னான். மந்திரி அமர்ந்ததும் மன்னன் ''இந்த அதிகாரி தட்சசீலத்திலிருந்து வந்திருக்கிறார். அவர் சொல்வதை நீங்கள் கேட்க வேண்டும்'' என்றார்.

அதிகாரியும் பிரதம மந்திரியை



ராகக் கலகங்களைத் தூண்டி விட்டுக் கொண்டிருக்கிறார்கள். மகத நாட்டைச் சின்னா பின்னமாக்குவதே அவர்களது நோக்கம்'' என்றார்.

பிரதம மந்திரியும் ''கலகக்காரர்கள் கலகம் செய்யும். முறை என்ன?'' என்று கேட்டான். அதிகாரிகள் ''கலகக்காரர்களைத் தூண்டி விடுபவர்கள் திறை மறைவில் இருக்கிறார்கள் அவர்கள் வெளிப்படையாக எதுவும் செய்வதில்லை. வியாபாரிகளையும் பிரமுகர்களையும் கலகம் செய்யும்படி அவர்கள் தூண்டி விடுகிறார்கள். மகத அரசாங்க அதிகாரிகளின் வீடுகளைத் தாக்கி அவர்களைச் சித்திரவதை செய்யும்படி மக்களை வற்புறுத்துகிறார்கள். அவர்களும் நம் வீரர்களில் பலரைக் கொன்று விட்டார்கள். நாளுக்கு நாள் நிலைமை மோசமாகிக் கொண்டே போகிறது'' என்றான்.

வணங்கி ''மந்திரியவர்களே! சந்திரகுப்த மன்னர் தட்சசீலப் பகுதியை வென்ற நாளிலிருந்து நேற்றைக்கு முன் தினம் வரை ஆட்சி தங்கு தடை இல்லாமல் நடந்து வந்தது. இப்போது நம் ஆட்சிக்கு எதிராகக் கலகங்கள் நடைபெறுகின்றன. கலகக்காரர்கள் மகத சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்து போகத் தனி நாட்டைக் கேட்கிறார்கள்'' என்றான். பிரத மந்திரியும் ''அப்படியா?'' எனக் கூறி மேலும் கேட்க ஆவல் காட்டினான்.

அதிகாரியும் ''இது ஆச்சரியமில்லை. கலகக்காரர்களைத் தூண்டி விடுவது கிரேக்கர்கள் என்பது நன்கு தெரிகிறது. சந்திரகுப்த மன்னர் அவர்களைத் தோற்கடித்து அப்பகுதியிலிருந்து விரட்டியதை அவர்கள் மறக்கவில்லை. அதனால் நம் ஆட்சிக்கு எதி

பிரதம மந்திரியும் ''இப்போது அவர்கள் வன்முறையில் இறங்கி விட்டதால் பயங்கர அடக்கு முறைகளைக் கையாண்டு கலகத்தை அடக்க வேண்டும். இதைத் தவிர வேறு வழி இல்லை. அரசே! நம் சேனாதிபதியைப் பெரும்படையுடன் தட்சசீலத்திற்கு இப்போதே கிளம்பிச் சென்று செல்லும்படி உத்திரவிடுங்கள்'' என்றான்.

பிந்துசாரனும் ''என் தந்தை பலமான மௌரிய சாம்ராஜ்யத்தை நிறுவி விட்டுச்சென்றார். அது சின்னாபின்னமாவதைப் பார்த்துக் கொண்டு கை கட்டிக் கொண்டு எதுவும் செய்யாமல் இருக்க மாட்டேன். எனவே நானே படையை நடத்திச் சென்று கலகத்தை அடக்குகிறேன்'' என்று ஆவேசத்

துடன் கூறினான்.

பிரதம மந்திரியும் ''உங்கள் விருப்பப்படியே நீங்கள் செய்யலாம். ஆனால் ஒரு சிறு வேண்டுகோள். தங்களது ஆறு புதல்வர்களில் சுசிம்மனைப் படைகளுக்குத் தலைமை தாங்கிச் செல்லும்படிக் கூறுங்கள். மகன் தலைமை தாங்கினால் தகப்பன் தலைமை தாங்கியது போலத்தானே அர்த்தம்'' என்றான்.

மன்னன் பதில் எதுவும் கூறாமல் பேசாமல் இருந்தான். அப்போது பிரதம மந்திரி மீண்டும் ''அரசே! என் சிறு வேண்டுகோளைக் கேளுங்கள். அரசகுமாரனிடம் நீங்கள் அவர் படைக்குத் தலைமை தாங்கிச் செல்ல வேண்டுமென்று முதலில் தெரிவிக்க வேண்டாம். அவரே நம்மிடம் சொல்லும்படி நாம் நிலைமையை உருவாக்கலாம். ஆறு அரசகுமாரர்களையும் இங்கே ஒன்று கூட்டுங்கள். அவர்களிடம் தட்சசீலத்தில் நடக்கும் கலவரங்களைக் கூறி அவற்றை அடக்க அரசகுமாரர்களில் ஒருவர்தாம் படைக்குத் தலைமை தாங்கிச் செல்வது மிகவும் அவசியம் என்பதை நாம் விளக்கிக் கூறுவோம். சுசிம்மன் எல்லோரிலும் மூத்தவனாதலால் தானே படைக்குத் தலைமை தாங்குவதாகக் கூறிக் கொண்டு முன் வருவான். ஏனெனில் இப்போது அவன்தானே மகதத்தின் இளவரசனாகப் போவதாக எண்ணி மகிழ்ந்து கொண்டிருக்கிறான். எனவே உற்சாகத்துடன் படைக்குத் தலைமை தாங்கி தட்சசீலத்திற்குப் போகத்தயாராகி விடுவான்'' என்றான்.

பிந்துசாரனுக்கு மந்திரியின் இந்த யோசனை மிகவும் நல்லதெனத் தோன்றியது. எனவே அவன் கூறியபடி செயல்பட இசைந்தான். அன்றே ஆறு அரசகுமாரர்களும் மன்னர் முன் வரவழைக்கப்பட்டார்கள். அங்கு பிரதம மந்திரியைக் கண்டதும் சுசிம்மனுக்குப் பதட்டம் கண்டது. நானும் அசோகனும் சண்டை இட்டதை பிரதம மந்திரி தன் தந்தையிடம் சொல்லி இருப்பாரோ என்று சந்தேகப்பட்டான்.



மன்னன் ஆறு அரசகுமாரர்களையும் நோக்கி ''நீங்கள் இன்னமும் சிறுவர்களல்ல. இளம் வயதினர்கள். அரசாங்கத்தின் ஆட்சி விஷயங்களை நன்கு நடத்த நீங்கள் உங்கள் கடமைகளை உணர்ந்து செயல்பட வேண்டிய காலம் வந்து விட்டது. அதற்கு ஒரு அரிய வாய்ப்பும் இப்போது உங்களுக்குக் கிடைக்கிறது. தட்சசீலப் பகுதி

யில் கலகங்கள் மூண்டு அங்கு அமை திக்கு பங்கம் விளைகிறது என்னும் செய்தி கிடைத்துள்ளது. அந்தக்கலகங் களை உடனே அடக்கியாக வேண் டும். அங்கு அமைதியை நிலைநாட்டி யாக வேண்டும். இந்த வேலையை உங்களில் யார் செய்யக் கூடியவன்?'' என்று கேட்டான்.

எல்லோருக்கும் முன் சுசிம்மன் தான் முன் வருவானென பிந்துசாரன் எதிர்பார்த்தான். ஆனால் அவன் வாய் திறக்கவில்லை. பேசாமலேயே இருந் தான். இன்னும் நால்வரும் சுசிம் மனைப் போலவே மௌனம் வகித் தார்கள். அப்போது அசோகன் முன் வந்து ''தந்தையே! அரசராகிய தங் களது கட்டளையை நான் சிரமேற் கொண்டு தாங்கள் கூறும் பணியை மேற்கொள்கிறேன். நான் முழு வெற்றி பெறுவேனென்ற முழு நம் பிக்கை எனக்கு உள்ளது. கட்டளை இடுங்கள். இப்போதே நான் படை களுடன்தட்சசீலத்திற்குப் புறப்பட்டுச் செல்கிறேன்'' என்றான்.

அது கேட்டு பிந்துசாரன் மிகவும் மகிழ்ந்து ''மகனே! உன் தைரியத்தை யும் தன்னம்பிக்கையையும் பெரிதும் பாராட்டுகிறேன். உடனே வெற்றிப் பயணத்திற்குத் தயாராகி வா'' எனக் கூறி அவனைக் கட்டித் தழுவிக் கொண்டான். பிறகு அவன் மற்ற புதல்வர்களைப் பார்த்து ''நீங்களெல் லாம் தொடை நடுங்கிகள். இன்னமும் என் முன் ஏன் நின்று கொண்டிருக் கிறீர்கள்? உங்கள் இருப்பிடங்களுக் குப் போய் மூக்குப் பிடிக்கத் தின்று விட்டு மூலையில் முக்காடு போட்டுக் கொண்டு உட்கார்ந்திருங்கள். போங் கள்'' என்று கூறி தன் முகத்தைத் திருப் பிக் கொண்டான்.

ஐந்து அரசகுமாரர்களும் அங்கி ருந்து சென்றார்கள். அசோகன் தன் தந்தையின்கால்களில் விழுந்து வணங் கினான். தன் தந்தையின் ஆசிகளைப் பெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றான்.

பிந்துசாரனும் ''சாணக்கியர் கூறி யது அப்படியே உண்மையாகி விட் டது. என்புதல்வர்களில் அசோகனைத் தான் அவர் சாமர்த்தியசாலி எனக் குறிப்பிட்டார்'' என்று தன் பிரதம மந்திரியிடம் கூறியவாறே யோசனை யில் ஆழ்ந்தான்.

**(தொடரும்)**





# காமாயனியின் கோரிக்கை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர இரவில் இப்படி ஏன் சிரமப்படுகிறாய்? முதலில் யாராவது ஒரு கோரிக்கை விடுத்துப் பிறகு அதை விட அதிகப் பயன் தரும் இன்னொரு கோரிக்கையும் விடுக்க அதை நிறைவேற்ற முயல்கிறாயா? இது எப்படிப் பட்ட முயற்சி என உணர்த்த உனக்குக் காமாயனி என்ற அரசகுமாரியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

ரத்ன சூடன் என்ற கந்தர்வனுக்கு பூவுலகைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. ஒரு பௌர்

## வேதாளம் சொல்லும் கதை



கள்? எப்படி இங்கு வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

அவனும் ''நான் ரத்னசூடன் என்ற கந்தர்வன். ஆகாய வழியாக நான் சென்று கொண்டிருந்த போது உன் அழகைக் கண்டு கீழே இறங்கி இங்கே வந்தேன்'' என்றான். அரச குமாரி சற்று கலவரத்துடன் ''நீங்கள் இங்கே இருந்து உடனே போய் விடுங் கள். இல்லாவிட்டால் உங்களுக்கு ஆபத்து'' என்றாள்.

ரத்ன சூடன் சிரித்தவாறே ''எனக்கா ஆபத்து? என் அற்புத சக்தி யைப் பார்'' என்று கூறித் தன் கையை ஆட்டினான். மறுநிமிடமே அந்தப் பூங்காவின் காவலாளிகளும் அரச குமாரியின் தோழிகளும் நினை விழந்து விழுந்தனர். அதைக் கண்டு காமாயனி ''அடேயப்பா!'' என்று அதிசயம் அடைந்தாள். இதைக் கேட்ட ரத்ன சூடன் மகிழ்ந்து போய் ''அழகியே! இப்படிக் கேட்கிறேனே என்று கோபித்துக் கொள்ளாதே. உன்னை மணக்க நான் விரும்புகி றேன். உனக்கு சம்மதமா?'' என்று கேட்டான்.

காமாயனி ஒருமுறை அவனை உற்றுப் பார்த்து விட்டுத் தலையைக் குனிந்து கொண்டு ''என் தந்தை என் திருமணத்திற்காக நீண்ட காலமாக முயன்று வருகிறார். ஆனால் எனக்கு ஏற்றவராக யாரும் கிடைக்கவில்லை. நான் உங்களை ஏற்கிறேன். ஆனால் அதற்கு முன் நீங்கள் ஒரு கஷ்டமான வேலையைச் செய்தாக வேண்டும்'' என்றாள்.

''அதென்ன?'' என்று ரத்ன சூடன் கேட்கவே காமாயனி ''எங்கள்

ணமி இரவில் ஆகாய வழியாக அவன் சென்று கொண்டிருந்தான். அப்போது காஞ்சனபுர அரசகுமாரி காமாயனி அரண்மனைப் பூங்காவில் தன் தோழி களுடன் உலாவிக் கொண்டிருந்தாள். அவளது அழகைக் கண்ட ரத்னசூடன் மலைத்துப் போனான். ஏனெனில் அப்படிப்பட்ட ஒரு அழகியை அவன் கந்தர்வ லோகத்தில் கூடப் பார்த்த தில்லை.

ரத்ன சூடனுக்கு அந்த அரசகுமாரி யுடன் பேச வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. எனவே ஆகாயத்திலிருந் துக் கீழே இறங்கி அவளை அணுகி ''பேரழகியே! நீ யார்?'' என்று கேட் டான். காமாயனி அவனைக் கண்டு ஆச்சரியப்பட்டு ''நான் காஞ்சனபுர அரசகுமாரி. இந்தப் பூங்காவினுள் ஆண்களே வரக் கூடாதே. யார் நீங்

அண்டை நாட்டு மன்னன் சூரசேனன் என்னை மணந்து கொள்ள வேண்டு மென்று வெறி கொண்டிருக்கிறான். ஆனால் அவனை மணக்க எனக்கு விருப்பமே இல்லை. அவன் எங்கள் நாட்டின் மீது படை எடுக்கவும் ஏற் பாடுகளைச் செய்து கொண்டிருக் கிறான். அவனது படைப் பலம் எங் களதை விட மிக அதிகமானது. எங்கள் படையின் பலம் அவ்வளவு இல்லை. அதனால் எங்களால் அவனை எதிர்த்துப் போரிட முடி யாது. நீங்கள் அவனைத் தோற்கடித்து விட்டால் நான் உங்களை மனப்பூர்வ மாக மணந்து கொள்கிறேன்'' என் றாள்.

ரத்ன சூடனும் ''இதுதானா? இப் போதே கந்தர்வலோகம் போய் எம் மன்னரிடம் தெரிவித்துவிட்டு வரு கிறேன்'' என்றான். ரத்ன சூடன் ஒரு பூலோகப் பெண்ணை மணக்க விரும் புகிறான் எனக் கேட்டதும் கந்தர்வ மன்னன் சித்திரசேனன் மிகவும கோபமடைந்தான். ஏனெனில் அவ னது மகள் லதாங்கி ரத்ன சூடனை மணக்க விரும்பினாள். இதை சித்திர சேனன் அறிந்திருந்தான்.

அதனால்அவன் ரத்ன சூடனைப் பார்த்து ''கந்தர்வர்கள் மானிடர்களு டன் சம்மந்தம் வைத்துக் கொள்ளக் கூடாது. எனவே என் மகளை மணந்து கொள். சுகமாக நீ இருக்கலாம்'' என் றான். ஆனால் ரத்ன சூடன் தான் பூலோகத்தில் இருக்கும் காமாயனி யைத் தவிர வேறு யாரையும் மணக்க விரும்பவில்லை என்று கூறவே சித்திர சேனன் கோபம் கொண்டு ''அப்படி யானால் இனி கந்தர்வலோகத்தில்



உனக்கு இடமில்லை. இனி நீ பூலோ கத்திலேயே இரு. இப்போது முதல் உனக்கிருக்கும் கந்தர்வ மாயா சக்தி இல்லாது போய் விடும்'' எனச் சபித்து விட்டான்.

இதனால் ரத்ன சூடன் பயந்து போய் விடவில்லை. பூவுலகிற்குச் சென்று அவன் காமாயனியைப் பார்க்க சென்றான். காமாயனி தன் தந் தைக்கு ரத்ன சூடனைப் பற்றி விவர மாகக் கூறியிருந்தாள். ரத்ன சூடன் கந்தர்வ லோகத்திலிருந்து வந்த காமா யனியைக் கண்டு அங்கு நடந்ததைக் கூறினான். அதைக் கேட்ட அவள் ''இனி எப்படி சூரசேனனுடன் போர் புரிந்து அவனை வெல்லப் போகிறீர் கள்?''என்று கேட்டாள்.

ரத்னசூடனும் ''என் கந்தர்வ மாயா சக்தி போய் விட்டாலும் என்

புஜ பலம் உள்ளது. நான் என் உயிரைப் பணயம் வைத்து போராடுவேன். அந்த சூர சேனனைப் போர்க்களத்தில் கதறக் கதற அடித்து விரட்டுவேன்'' என்று வீராவேசத்துடன் கூறினான்.

ஒரு மாதத்திற்குப் பின் காஞ்சனபுரப் படைக்கு ரத்ன சூடன் தலைமை தாங்கி சூரசேனனின் கோட்டையை முற்றுகையிட்டான். சூரசேனனுக்கு படைபலம் அதிகம். அவனும் நல்ல பலசாலி. சூர சேனனுக்கும் ரத்ன சூடனுக்கும் போர் கடுமையாக நடந்தது. சூரசேனன் எறிந்த ஒரு ஈட்டி ரத்ன சூடனின் தலையைத் தாக்க வந்தது. அப்போது ஒரு வீரன் சட்டெனப் பாய்ந்து அந்த ஈட்டியைத் தட்டி விட்டான். அது அவனது தோளில் குத்தியது. அவ்வீரனைப் பார்த்த ரத்ன சூடன் ''இவனை எங்கோ பார்த்திருக்கிறேனே'' என்று நினைத்தான்.

ரத்ன சூடன் வீராவேசத்துடன் போர்புரிந்து சூரசேனனின் மீது அம்புகளாகப் பொழிந்தான். அந்த அம்புகளில் ஒன்று சூரசேனனின் மார்பில் பாயவே அவன் பலமாகக் கத்தியவாறே கீழே விழுந்தான். இதைக் கண்ட அவனது படை சிதறி ஓடி விட்டது.

ரத்னசூடன் உடனே போர்களத்தில் சமயத்தில் வந்து தன்னைக் காத்த அந்த வீரனைத் தேடலானான். காயமுற்ற வீரர்கள் இருக்கும் கூடாரத்தில் அவன் இருக்கலாம் என எண்ணி அக் கூடாரத்திற்குச் அவன் சென்றான். அவ்வீரனை அவன் கண்டு திடுக்கிட்டான். அவன் காயமுற்று நினைவிழந்து படுத்துக் கிடந்தான். அவ்வீரனின் தலைப் பாகை சற்றே சரிந்திருந்தது. அவனுக்கு அவ்வீரன் யாரென்று உடனேயே தெரிந்து விட்டது. அப்படி வீரனாக வேடமணிந்து வந்தவள் கந்தர்வ மன்னன் சித்திர சேனனின் மகள் லதாங்கிதான்.



அவன் உடனே அவளுக்குச் சிகிச்சை செய்து அவளுக்கு நினைவு வரச் செய்தான். லதாங்கி கண் திறந்து பார்த்துத் தன்னெதிரே ரத்ன சூடன் இருப்பதைக் கண்டு தலை குனிந்து கொண்டாள். ரத்ன சூடன் அவளைப் பார்த்து ''இதென்ன உன்னை வேண்டாமென உதறித் தள்ளிவிட்டு வந்த எனக்காக நீ தியாகம் செய்கிறாயா?'' என்று தழதழத்த குரலில் கேட்டான்.

அவளும் ''நீ இல்லாத கந்தர்வ லோகம் சூன்யமாக எனக்கு இருந்தது. அதனால் உன்னைப் பார்த்துக் கொண்டேயாவது பூலோகத்தில் இருக்கலாமென்று வந்தேன். மந்திர சக்தி இல்லாத நீ சூரசேனனை எதிர்க்கும்போது உனக்கு ஆபத்து வரலாமென்று எண்ணி உன்னைப் பின் தொடர்ந்து வந்தேன். உன்னைக் காப்பாற்றி விட்டேன் என்ற திருப்தி எனக்கு ஏற்பட்டு விட்டது. அது போதும். இனி நீ போய் அந்த காமாயனியை மணந்து கொண்டு சுகமாக வாழ்'' எனக் கூறினாள்.

ரத்னசூடன் அவளுக்குத் தன் நன்றியை தெரிவித்துவிட்டு அங்கிருந்து போய் காமாயனியைப் பார்த்தான். மன்னன் அவனை சூரசேனனைத் தோற்கடித்ததற்காகப் பாராட்டினான். காமாயனியும மிகவும் மகிழ்ந்து ''இனி நம் திருமணம் நடந்து விட்டது போலத்தான். திருமணம் ஆனதும் என் மற்றொரு கோரிக்கையையும் நிறைவேற்ற வேண்டும்'' என்றாள்.

ரத்ன சூடனும் அது என்ன எனக் கேட்கவே காமாயனியும் ''நீங்கள் இன்னும் பல நாடுகளை வென்று சக்கரவர்த்தியாக வேண்டும் அப்போது தான் என்னை எல்லோரும் சக்கரவர்த்தினி எனப் புகழ்ந்து கொண்டிருப்பார்கள். அதுதான் என் ஆசை'' என்றாள். உடனே ரத்ன சூடன் உரத்த குரலில் ''என்னை மன்னித்து விடு அரச



குமாரி! நான் உன்னை மணக்கப் போவதில்லை'' என்று கூறிவிட்டு அங்கிருந்து விர்ரென்று போய் விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! கடைசியில் ரத்னசூடன் நடந்து கொண்டவிதம் விசித்திரமாக இல்லை? கந்தர்வ லோகத்திலிருந்து வந்த அவன்தானே காமாயனியைப் பார்த்த பின் அவளை மணக்க விரும்புவதாகக் கூறினான்? அதற்காக அவன் கந்தர்வ மன்னன் மகளை ஏற்காமல் கந்தர்வலோக வாழ்க்கையையும் மாயா சக்தியையும் இழந்து காமாயனியை அடையத்தானே ஏங்கினான்? இப்படி இருந்தும் கடைசியில் ஏன் அவன் காமாயனியை மணக்க முடியாது என்று கூறிவிட்டுச் சென்றான்? இது பைத்தியக்காரனின் செயல்தானே? இந்தக் கேள்விகளுக்கு சரியான விடைகள் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலைவெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''ரத்ன சூடன் அரசகுமாரி காமாயனியின் பொருட்டு பல தியாகங்களைச் செய்தான். போரில் தன் உயிரையே பணயம் வைத்தான். கந்தர்வ மன்னனின் மகளை மணக்கவும் விரும்பவில்லை. காமாயனி அவனை மணக்க முதலில் ஒரு கோரிக்கையை விடுத்தாள். அதை ரத்னசூடன் நிறைவேற்றிய பின் அவள் தன் இரண்டாவது கோரிக்கை வாயிலாகத் தன் பேராசையை வெளிப்படுத்தித் தான் சக்கரவர்த்தினி எனப் புகழப்பட ரத்னசூடனைப்பல போர்களைப் புரிய வேண்டுமென்று கேட்டாள். லதாங்கியையும் காமாயனியையும் ஒப்பிட்டுப் பார்த்த ரத்னசூடன் லதாங்கியின் தியாகத்தையும் காமாயனியின் சுயநலத்தையும் நன்கு புரிந்து கொண்டான். சுயநலம் நாடும் காமாயனியை மணந்தால் தான் சுகமாக இருக்க முடியாது என அறிந்தே அவன் காமாயனியை மணக்க முடியாதெனக் கூறிவிட்டுச் சென்றான். இது அறிவு மிக்க செயல். பைத்தியக்காரச் செயலல்ல'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவளது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# நம்பிக்கை வேண்டும்!

கோமேதக மன்னரின் ராஜ வைத்தியருக்கு ஒரு முறைக் கடும் நோய் கண்டது. அவர் படுத்த படுக்கையாகக் கிடக்கவே மன்னன் மிகவும் கவலைப்பட்டு மந்திரியை அழைத்து ''நம் வைத்தியருக்கு அவருடைய வைத்தியமே பலிக்கவில்லை. எனவே வேறு ஒரு நல்ல வைத்தியரைக் கொண்டு அவருக்கு மருந்து கொடுத்து குணப்படுத்தச் சொல்லலாமா?'' என்று கேட்டான்.

மந்திரியும் ''அரசே! நம் நாட்டில் வைத்தியர்களுக்கா குறைச்சல்? ஆனால் அவர்களில் யார் திறமை மிக்கவர் என்பது நமக்குத் தெரியாதே. எனவே அரசாங்க வைத்தியரின் நோயை குணப்படுத்தும் வைத்தியருக்கு நல்ல சன்மானம் அளிக்கப்படும் என அறிவிப்போம். அப்போது யாராவது முன் வருவார்.'' என்றார்.

மன்னனும் அவ்வாறே அறிவித்தான். ஆனால் பல நாட்களாகியும் ஒரு வைத்தியர் கூட ராஜ வைத்தியருக்கு வைத்தியம் செய்ய வரவில்லை. எல்லா வைத்தியர்களுமே ராஜ வைத்தியர் பக்கம் போனாலே அவர் வைத்திய சாஸ்திரத்தில் பல கேள்விகளைக் கேட்பாரே எனப் பயந்தே வராமல் இருந்தனர்.

இப்படியே பத்து நாட்கள் கழிந்தன. பதினோறாவது நாள். ஆனந்த சர்மா என்ற வைத்தியர் வந்து மந்திரியைக் கண்டு தான் ராஜ வைத்தியருக்கு வைத்தியம் செய்ய வந்திருப்பதாகக் கூறினார். மந்திரியும் அவரை அழைத்துக் கொண்டு ராஜ வைத்தியரிடம் சென்றார்.

ராஜ வைத்தியரும் அவரிடம் சில கேள்விகள் கேட்டு விட்டு ''உங்களுக்கு வைத்திய சாஸ்திரத்தை கற்பித்தவர் யார்?'' என்று கேட்டார். ஆனந்த சர்மாவும் பணிவுடன் ''நான் கோவிந்தாச்சாரியாரின் சீடன். அவர் தங்களைப் பற்றிக் கூறியதை எல்லாம்

—எஸ். சோபினி—

கேட்டிருக்கிறேன். தாங்களும் அவரும் ஒரே குருகுலத்தில் படித்ததாகக் கூறினார்'' என்றார்.

ராஜ வைத்தியரும் அது கேட்டு மகிழ்ந்து ''ஓ! கோவிந்தாச்சாரியின் சீடரா நீங்கள்? அவன் என்னை நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறானா? அவன்தான் உங்களை இங்கே அனுப்பி வைத்தானா?'' என்று கேட்டார். ஆனந்த சர்மாவும் ''இல்லை. நான் அவரது குரு குலத்தில் படிப்பை முடித்துவிட்டு வந்து கொண்டிருந்த போது மன்னரின் அறிவிப்பைக் கேட்டேன். அதனால் தங்களுக்கு வைத்தியம் செய்யலாமே என்று நானாகவே வந்தேன்.'' என்றார்.

ராஜ வைத்தியர் அது கேட்டுப் புன்னகை புரிந்து ''அப்படியானால் நான் இப்போது உங்கள் நோயாளி. நீங்கள் என் வைத்தியர். சரி, என்னைப் பரீட்சித்துப் பார்த்து எனக்கும் மருந்து கொடுக்கலாம். நீங்கள் எனக்குத் தெரிந்த கோவிந்தாச்சாரியின் சீடன் என்பதால் உங்கள் மீது நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது'' என்றார். ஆனந்த சர்மாவும் அவரைப் பரீட்சித்துப் பார்த்துவிட்டு மருந்து கொடுக்கவே ஒரே வாரத்தில் ராஜ வைத்தியர் குணமடைந்து விட்டார்.

இதைக் கண்டு மன்னன் மந்திரியிடம் ''இந்த ஆனந்த சர்மா நம் வைத்தியரை விடத்திறமை மிக்கவர் போல் தோன்றுகிறதே நம் வைத்தியருக்கு ஓய்வு கொடுத்து விட்டு இவரையே ராஜ வைத்தியராக நியமித்து விடலாமா?'' என்று கேட்டான். மந்திரியும் ''ஆனந்த சர்மாவையே அழைத்து இது பற்றிக் கேட்போம்'' எனக் கூறி ஆனந்த சர்மாவை அழைத்து வரச் சொன்னார்.

சர்மா வந்ததும் மந்திரி மன்னனின் அபிப்பிராயத்தை அவரிடம் கூறவே அவரும் ''தங்களது வைத்தியர் வைத்திய சாஸ்திரத்தையே கரைத்துக் குடித்தவர். அவருக்குத் தெரியாத வைத்திய முறையே இல்லை. பிறருக்கு நன்கு வைத்தியம் செய்பவர்கள் தமக்கு நோய் வந்தால் தடுமாறத்தான் செய்வார்கள் ராஜ வைத்தியரும் அப்படித் தான் தடுமாறினார்'' என்றார்.

அது கேட்டு மகிழ்ந்து மன்னன் ஆனந்த சர்மாவுக்குப் பரிசுகளை அளித்தோடு துணை அரசாங்க வைத்தியர் என்ற பதவியையும் அளித்தான்.








# தென்னிந்தியாவின் நுழைவாசல்

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கோப்குமார்**

சோழ மண்டலக் கரையில் அடுத்து நாம் செல்வது மாமல்லபுரத்திற்கு. இது பல்லவ நாட்டின் பழங்காலத்து துறைமுகம். கி.பி. ஏழாவது நூற்றாண்டில் ஆண்ட பல்லவ மன்னன் நரசிம்மவர்மனின் நினைவில் அவனுக்குக் கொடுக்கப்பட்ட மஹாமல்லர் என்ற பட்டப் பெயரை இத்துறைமுகத்திற்குச் சூட்டினார்கள். அது மருவி மாமல்லபுரம் என்றாயிற்று. இப்போது அக்காலத்துப் புகழ் பெற்ற இத்துறைமுகம் இல்லை. ஆனால் திறந்த வெளியில் சிற்பக்கலை ததும்பும் பாறைகளும், குகை மண்டபங்களும் கோவில்களும் கல் ரதங்களும் உள்ளன.

இவற்றில் மிகவும் பெயர் பெற்ற பெரிய பாறைச் சிற்பம் அர்ஜுனன் தவம். இதனை கங்காவதாரம் எனவும் கூறுகிறார்கள். இதன் நீளம் 23 மீட்டர். உயரம் 13 மீட்டர். உலகிலேயே சிற்பங்கள் கொண்ட பாறைகளில் இதுதான் பெரிதெனக் கருதப்படுகிறது. மழை காலத்தில் இதன் இருபாறைகளுக்கிடையே நீர் பெருகி வருவது கங்கை நதி இறங்கி வருவது போலக் கருதப்படுகிறது.

இங்குள்ள கல் ரதங்கள் பஞ்ச பாண்டவ ரதங்கள் எனப்படுகின்றன. தருமர், பீமன், அர்ஜுனன், சஹதேவன், துரௌபதி ஆகிய பெயர்கள் இவற்றிற்குச் சூட்டப்பட்டுள்ளன.





**பஞ்ச பாண்டவ ரதங்கள்**

வராகம், மகிஷாசுரமர்த்தினி குகைகள் அர்ஜுனன் தவப்பாறைக்குக் கிழக்கே உள்ளன. இவற்றில் புராணக் கதைகளின் அடிப்படையில் சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ளன.

வராகக் குகையில் மகாவிஷ்ணு வராக அவதாரம் எடுத்து பூமாதேவியை இரண்யாட்சன் என்ற அசுரனிடருந்து காப்பாற்றியது சிற்பங்களில் செதுக்கப்பட்டுள்ளது.

மகிஷாசுரமர்த்தினி கோவிலில் இரு பகுதிகள் உள்ளன. ஒரு பகுதியில் மகிஷாசுரனுடன் போர் புரிந்து கொல்வதைக் காட்டப்பட்டுள்ளது. மகிஷாசுரன் மிகுந்த பலம் பெற்று இந்திரனையும் மற்ற தேவர்களையும் தேவலோகத்திலிருந்தே விரட்டி விட்டான். தேவர்களெல்லாம் ஓரிடத்தில் ஒன்று கூடித் தம் சக்திகளை எல்லாம் கொடுத்து துர்க்காவை உருவாக்கினார்கள். அந்த அம்பாளிடம் எல்லாவித ஆயுதங்களும் இருந்தன. துர்க்கா ராட்சஸனான மகிஷாசுரனுடன் போர் புரிந்து அவனைக் கொன்றாள். அதனால் துர்க்காவிற்கு மகிஷாசுரமர்த்தினி என்ற பெயர் ஏற்பட்டது. நவராத்திரியின் போது இந்த துர்க்காவிற்கு பூஜை நடக்கிறது. இக்கோவிலிலுள்ள சிற்பம் துர்க்கா சிங்கத்தில் அமர்ந்து எருமைத் தலை கொண்ட ராட்சஸனைத் தாக்கும் காட்சியாக உள்ளது. இதற்கு எதிரே விஷ்ணு சயனித்திருப்பது போன்ற காட்சி உள்ளது.

கடற்கரைக் கோவில் அல்லது ஜலசயனம் என்பது கடற்கரையில் உள்ளது. இது சிவன் கோவில். இதைச் சுற்றியுள்ள மதிலில் பல நந்திகளின் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன.

மாமல்லபுரம் வைஷ்ணவ ஆழ்வார்களில்



**கடற்கரைக் கோவில் அல்லது ஜலசயனம்**

ஒருவரான பூதத்தாள்வார் பிறந்த இடம். அவர் ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவார்.

இந்தப் பல்லவர் படைப்பை விட்டுப் புறப்பட்டு சோழ மண்டலக் கலைஞர் கிராமத்தை அடைகிறோம். இங்குள்ள கலைஞர்கள் தம் படைப்புகளை விற்று வாழ்க்கை நடத்துகிறார்கள். இங்கு ஓவியங்களும், பல தரப்பட்ட கைவினைப் பொருள்களும், படங்களும் இருப்பதோடு கவியரங்கங்களும் நடன நிகழ்ச்சிகளும் இங்கு அவ்வப்போது நடைபெறுகின்றன.


இந்தியாவிலேயே மிக உயரக் கொடி மரம்

இங்கிருந்து நாம் அடுத்துப் போவது தமிழ்நாட்டின் தலை நகரும் இந்தியாவில் நான்காவது பெரிய நகருமான சென்னை. இதன் முந்தையப் பெயர் மெட்ராஸ். இது கடற்கரையில் 17 கிலோ மீட்டர் நீளத்திற்குப் பரவியுள்ளது. இது தென்னிந்தியாவின் நுழைவாசல்.

முதன்முதலில் 17ம் நூற்றாண்டில் ஆங்கிலேயர் தம் பண்டக சாலையை தற்போதைய சென்னைக்கு 40 கி.மீ. வடக்கே ஆர்காம் என்ற இடத்தில் நிறுவ முடிவு செய்தனர். ஆனால் அது அவர்கள் வியாபாரத்திற்கு ஏற்ற இடமல்ல என்பதை உணர்ந்து பண்டக சாலையின் தலைவர் பிரான்சிஸ் டே தெற்கே போய் ஏற்ற இடம் எது என்று பார்த்தார். 1639 ஜூலை 22ல் அவர் மதராஸ் குப்பம் என்ற மீனவர் கிராமத்தை தார்மர்லா வெங்கடாத்திரிநாயக் என்ற சந்திரகிரி மன்னரின் சிற்றரசரிடமிருந்து விலைக்கு வாங்கி விட்டார். இந்த மனித நடமாட்டமில்லாத குறுகிய நிலப்பகுதி நரிமேடு என அப்பக்கத்தில் வசிப்பவர்களால் குறிப்பிடப்பட்டது.


கோட்டை அருங்காட்சியகம்

இதுதான் சென்னை தோன்றிய முதல் இடம். பிரான்சிஸ்டே இங்கு பண்டக சாலையை நிறுவி ஆங்கிலேயரின் குடியிருப்புகளை அமைத்தார். இங்கு ஒரு கோட்டையைக் கட்டி அதற்கு செண்ட்ஜார்ஜ் கோட்டை எனப் பெயரிட்டார். அது ஆங்கிலத்துறவி செண்ட் ஜார்ஜின் நினைவில் அவர் பிறந்த ஏப்ரல் 23ந் தேதியன்று 1640ல் கட்டி முடிக்கப்பட்டது. இதற்குள் செண்ட் மேரி ஆங்கிளிகன் சர்ச் கட்டப் பட்டுள்ளது. இங்கு கவர்னராக இருந்த எல்ஹு ஏலின் திருமணம்தான் முதலில் நடந்தது. இவர் பெயரில் அமெரிக்காவில் ஏல் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டுள்ளது.

இக்கோட்டையில் வரலாற்றைக் குறிக்கும் பத்திரங்கள், ஓவியங்கள், நாணயங்கள், பதக்கங்கள், ஆயுதங்கள், சிலைகள் மற்றும் நகர வரலாற்றைக் குறிக்கும் பொருள்கள் கண்காட்சியாக வைக்கப்பட்டுள்ளன. பாங்க் ஆஃப் மெட்ராஸ் தான் இந்தியாவின் முதல் வங்கியாகி இம்பீரியல், ஸ்டேட் பாங்குகளுக்கு முன்னோடியாக அமைந்தது. போர்ட் எக்ஸ்சேஞ்சில் வியாபாரிகள் தொழில் பற்றி தொடர்பு கொண்டனர். இக்கட்டிடத்தின் மீது கலங்கரை விளக்கம் இருந்தது.

இக்கோட்டையின் கொடிமரம் 50 மீட்டர் உயரமானது. இந்தியாவிலேயே இதுதான் மிக உயரமான கொடிமரம். இங்கு தலைமைச் செயலகமும் சட்டமன்றமும் உள்ளன.

இங்கு அகண்ட மணல் பகுதியான மெரீனா கடற்கரை உள்ளது. இது உலகில் இரண்டாவது நீளமான கடற்கரை எனப்படுகிறது. இதன் நீளம் 3 1/2 கி.மீ. இங்கு தமிழக முதலமைச்சராக இருந்த சி.என். அண்ணாத்துரையின் சமாதி உள்ளது.

இவர் 1967ல் திராவிட முன்னேற்றக் கழகம் பதவிக்கு வந்த போது தலைமை ஏற்று முதலமைச்சரானார். ஆனால் அடுத்த ஆண்டிலேயே மரணமுற்றார். இவரது மரணத்தின் போது இலட்சக் கணக்கில் மக்கள் கூடிக் கண்ணீர் வடித்தனர். அருமையாக 'அண்ணா' என்றழைக்கப்பட்ட இவரது உடல் சென்னைக் கடற்கரையில் அடக்கம் செய்யப்பட்டு அங்கு சமாதியும் எழுப்பப் பட்டது. இன்றும் அண்ணா சமாதியைக் காண மக்கள் கூட்டம் கூட்டமாக வருகிறார்கள்.



**அண்ணா சமாதி**



# இழப்பிலும் இன்பம்

பட்டணத்தில் வாழ்ந்த ஹேமா அங்கே உத்தியோகத்திலிருந்த சந்திரனை மணந்து கொண்டாள். ஆனால் மணமான மறு மாதமே கிராமத்திலிருந்த அவனது தந்தை இறந்து விட்டதால் அவன் விவசாயத்தை கவனித்துக் கொள்ளவும் தன் தாயையும் விவாகத்திற்கு நிற்கும் தங்கையையும் பராமரிக்கவும் வேண்டியதாயிற்று. அதனால் அவன் பட்டணத்து வேலையை விட்டுவிட்டு ஹேமாவுடன் கிராமத்திற்கு வந்து விட்டான்.

ஹேமாவுக்கு கிராமமே பிடிக்கவில்லை. அவள் பட்டண வாழ்க்கையை விரும்பினாள். தன் மாமியார், நாத்தனார் என்ற பிடுங்கல் இல்லாமல் தனிக் குடித்தனம் செய்ய விரும்பினாள். அதனால் அவளுக்கு அந்த கிராமம் கசந்தது. மாமியாரும் நாத்தனாரும் பிடிக்கவில்லை.

பதினைந்து நாட்களுக்குப் பின் அவள் சந்திரனிடம் ''நான் பட்டணத்திலுள்ள என் பிறந்த வீட்டிற்குப் போகிறேன். எனக்கு இந்த ஊர் பிடிக்கவில்லை. என் தகப்பனாரிடம் சொல்லி உங்களுக்கு ஒரு நல்ல வேலையாக வாங்கிக் கொடுக்கச் சொல்கிறேன். நீங்கள் அங்கே வந்து விடுங்கள்'' என்றாள். சந்திரனும் தன் மனைவி சொன்னதைக் கேட்டு அவள் மனம் நோகக் கூடாதே என்று நினைத்து அவளைப் பட்டணத்திலுள்ள அவளது தந்தையின் வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டு வந்தான்.

ஹேமா தன் தந்தையிடம் தான் அந்த பட்டிக் காட்டில் குடித்தனம் செய்ய முடியாது எனக் கூறிச் சந்திரனுக்கு நல்ல வேலை ஒன்றைப் பட்டணத்திலேயே வாங்கிக் கொடுக்கும்படி நச்சரித்தாள். அவரும் சந்திரனுக்கு ஒரு நல்ல வேலை கிடைக்கும்படிச் செய்தார். ஆனால் அந்த வேலை பட்டணத்தில் அல்ல, வேறு ஒரு

—பாபநாசம் சாமா—



பெரிய நகரத்தில்.

ஹேமா உடனே கிராமத்திற்குப் போய் சந்திரனிடம் ''உம். கிளம்புங்கள். நகரில் உங்களுக்கு நல்ல வேலை கிடைத்து விட்டது'' என்றாள். அப்போது சந்திரன் ''என் நில புலன்களை யார் கவனித்துக் கொள்வார்கள்? அம்மாவையும் தங்கையையும் நம் கூட அழைத்துச் செல்ல வேண்டுமே. என்ன செய்வது?'' என்று கேட்டான்.

ஹேமாவோ ''அவர்கள் நம்முடன் இருக்க வேண்டாம். இங்கேயே இருந்து அவர்கள் விவசாயத்தை கவனித்துக் கொள்ளட்டும். நாம் நகரில் தனியாக இருப்போம்'' என்றாள். சந்திரனுக்கு இந்த ஏற்பாடு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஆனால் அவனது தாய் தன் மருமகளின் மனதைப் புரிந்து கொண்டு தன் மகனிடம் ''சந்திரா! நீ கவலைப்படாதே. நாங்கள் விவசாயத்தை கவனித்துக் கொண்டு இங்கேயே இருக்கிறோம். நீ நகரில் புதிய வேலையில் சேர். நாங்கள் ஆடி, தீபாவளி என்று பண்டிகைகள் வரும்போது நகருக்கு வந்து உங்களுடன் நாலைந்து நாட்கள் இருந்து விட்டு வந்தால் போயிற்று'' என்றாள்.

இதைக் கேட்ட பின் சந்திரன் ஹேமாவுடன் நகருக்குக் கிளம்பிச் சென்றான். அவள் அங்கு தன் இஷ்டத்திற்கு பட்டுப் புடவைகளை வாங்கிக் கொண்டாள். ஓரிரண்டு நகைகளையும வாங்கிப் போட்டுக் கொண்டாள். ஆடிப் பண்டிகை சமீபிக்கவே சந்திரனின் தாயார் தன் மகனுக்குத் தானும் தன் மகளும் ஆடிப் பண்டிகைக்கு வர எண்ணி இருப்பதாகக் கடிதம் எழுதினாள். கடிதம் கிடைத்த மறு நாளே ஹேமா தனக்குக் காய்ச்சல் என்று கூறிப் படுத்துவிட்டாள். தன் தாயாரும் தங்கையும் வந்தால் ஹேமாவால் அவர்களை கவனிக்க முடியாதே என எண்ணி சந்திரன் ஹேமாவுக்கு உடம்பு சரி இல்லை என்றும் இப்போது வர வேண்டாமென்றும் தன் தாயாருக்குக் கடிதம் எழுதிவிட்டான். ஆனால் ஹேமா ஆடிப் பண்டிகைக்குத் தனக்கு ஒரு ஜோடி தங்க வளையல் வாங்கிக் கொண்டாள்.

இரண்டு மாதங்களாயின தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்தது சந்திரன் தாயாரையும் தங்கையையும் வரவழைத்து அவர்களுக்குப் பட்டுப் புடவைகள் வாங்கிக் கொடுக்க நினைத்தான். அப்போது ஹேமா ''எனக்குப் பட்டுப் புடவை வாங்க வேண்டாம். அந்தப் பணத்தில் ஒரு

தங்கச் சங்கிலி வாங்கிக் கொடுத்து விட்டு உங்கள் தாயாருக்கும் தங்கைக் கும் பட்டுப் புடவை வாங்கிக் கொடுங் கள்'' என்றாள்.

மறுநாளே ஹேமா தன் கணவனு டன் அவ்வூரிலுள்ள ஒரு நகைக்கடைக் குச் சென்றாள். அங்கு பல நகைகள் பளபளவென்று இருந்தன. அவற்றில் ஹேமா தனக்குப் பிடித்துப் போன ஒரு சங்கிலியைக் காட்டி ''இது என்ன விலை?'' என. கடை வேலையாளும் ''இது ஏழு பவுன் எடையுள்ளது. பவுன் ஆயிரம் ரூபாய்'' என்றாள். ஹேமாவும் அதை எடுத்துக் கொள்வ தாகக் கூறக் கடை ஆளும் கடைக்கார னின் காதில் விழும்படி ஏழு பவுன் தங்க மாலை எனக் கூறினான்.

ஹேமா சங்கிலியை வாங்கிக் கொண்டு கடைக்காரனிடம் போன போது பில்லில் கடைக்காரன் மூன்று பவுன் சங்கிலி என எழுதி மூவாயிரம் ரூபாய் எனப் போட்டிருந்தான். அதைக் கண்ட சந்திரன் அது பற்றிக் கேட்க வாயெடுத்த போது ஹேமா அவனைப் பேசாதிருக்கச்சொல்லி மூவாயிரம் ரூபாயைக் கடைக் காரனிடம் கொடுத்துவிட்டு கடையி லிருந்து சந்திரனுடன் வெளியே வந்து விட்டாள்.

வழியில் அவள் ''கடைக்காரன் ஏமாந்து போய் ஏழு பவுனுக்கு பதி லாக மூன்று பவுன் என்று 'பில்' போட்டு விட்டான். நல்ல வேளை உங்களை எதுவும் பேசவிடாமல் தடுத்ததால் நமக்கு நாலாயிரம் ரூபாய் லாபம். இந்தப் பணத்திற்கு எனக்கும் தீபாவளிக்குப் பட்டுப் புடவை எடுத் துக் கொள்வேன்'' என்று ஜம்பமாகக்



கூறினாள்.

ஆனால் வீட்டிற்குப் போய் அந்த சங்கிலியை எடுத்த போது அது ஓரிடத் தில் பட்டென்று அறுந்தது. மறு நாள் காலை அதை ஒட்ட வைக்க ஹேமா பக்கத்திலிருந்த ஒரு பொற் கொல்லன் கடைக்குச் சென்றாள். அவன் அதை வாங்கிப் பார்த்து விட்டு ''இது முலாம்பூசிய நகை. இதையெல்லாம் ஒட்டவைக்க என்னால் முடியாது'' என்று கூறிச் சங்கிலியைத் திருப்பிக் கொடுத்து விட்டான். ஹேமா திகைத் துப் போனாள். தங்க முலாம் பூசிய நகையைக் கொடுத்து ஏமாற்றி விட்டான் என்று ஆத்திரப்பட்டு அந் தக் கடையின் 'பில்' லுடனும் சங்கிலி யுடனும் அப்போதே அவள் முன் தினம் சென்ற நகைக் கடைக்குள் போனாள்.

அவள் கடைக்காரரைப் பார்த்து ''இது நான் நேற்று வாங்கிய சங்கிலி இது தங்கம் என்று சொல்லி தங்க முலாம்பூசிய சங்கிலியைக்கொடுத்து ஏமாற்றி விட்டீர்கள். இப்போதே போலீசைக் கூப்பிடுகிறேன்'' என்று மிரட்டினாள். கடைக்காரனோ ''இது எங்கள் கடையில் வாங்கப்பட்ட சங்கிலியே அல்ல. நீதான் எங்களை ஏமாற்றப் பார்க்கிறாய். நாங்கள் பில் போட்டுக் கொடுத்ததுமூன்று பவுன் எடைச் சங்கிலி. இதன் நிறையோ அதை விட அதிகம்'' எனக் கூறி அச் சங்கிலியை நிறுத்துக் காட்டினான். அது ஏழு பவுன் நிறை இருந்தது.

கடைக்காரன் சங்கிலியை அவளிடம் கொடுத்து ''இப்போது நீ மரியாதையாகப் போகப் போகிறாயா அல்லது நான் போலீசைக் கூப்பிடட்டுமா?'' என்றான். அப்போதுதான் கடைக்காரன் வேண்டுமென்றே மூன்று பவுன் என பில்லில் போட்டு ஏமாற்றி விட்டான் என்பது அவளுக்குப் புரிந்தது. அவள் மூவாயிரம் ரூபாயை இழந்தாள்.

சந்திரன் அவளிடம் ''ஹேமா! கெடுவான் கேடு நினைப்பான் என்பது உன் விஷயத்தில் சரியாயிற்று. ஆடிப் பண்டிகைக்கு என் தாயும் தங்கையும் வரக்கூடாது என்பதற்காக நாடகமாடினாய். இப்போது தீபாவளிக்கும் அவர்களுக்கு எதுவும் நான் வாங்கிக் கொடுக்கக்கூடாது என்பதற்காக ஏழாயிரம் ரூபாய் விலையில் நகையை எடுத்தாய். ஆனால் அதனால் மூவாயிரம் ரூபாய் நஷ்டமாயிற்று. இனியாவது இப்படிக் கீழ்த்தரமாக யோசனை செய்வதை விட்டுவிட்டு எல்லோரிடமும் நல்ல விதமாகப் பழக வேண்டுமென நினை'' என்றான்.

ஹேமாவும் ''ஆமாம். தவறு எனதுதான். எனக்குப் பட்டுப்புடவை வேண்டாம். உங்கள் தாயாரையும் தங்கையையும் தீபாவளிக்கு வரச் சொல்லி அவர்களுக்குப் பட்டுப் புடவைகள் வாங்கிக் கொடுங்கள். இந்த மூவாயிர ரூபாய் இழப்பு எனக்கு ஒரு நல்ல படிப்பினையைக் கொடுத்துவிட்டது'' எனக் கூறினாள்.

அது கேட்டு சந்திரன் ஹேமா உண்மையிலேயே திருந்தி விட்டாளென்று திருப்தி அடைந்தான்.



## அம்புலிமாமா

# பொன்மயமான பொழுதுகள் - 11





**1. இந்தப் பெரிய பௌத்த ஆலயம் - மலை?**

இது கி.பி. 800ல் கட்டப் பட்டது. கி.மு. முதலாவது நூற்றாண்டில் பௌத்த மகத் தாராளக் கொள் கைக்காகத் தோன்றிய மகாயான புத்த மதப் பிரி வின் வரலாற்றுச் சின்ன மான இது உலகிலேயே மிகப் பெரியது?

## உலகில் இவற்றை எங்கு காண்பீர்கள்?

**2. பழைய வளரும் மரம்**

சுமார் 900 ஆண்டுகள் வாழ்ந்ததாக பைபிளில் கூறப்படும் மெது-செலா வின் பெயர் இதற்குச் சூட்டப்பட்டது. இது 4600 ஆண்டுகளாக இருந்து வருகிறது.



**3. கிளியோபாட்ராவின் ஊசி!**

இது 3500 உயரக் கல்தூண். இதனை எகிப்தின் பரோஹ் மூன்றாவது துட்மோஸ் கி.மு. 1475ல் சூரியதேவ னின் ஆலயத்திற்காக நிறுவி னார்.



**4. பெருமூச்சுப் பாலம்**

கைதிகள் ஒரு புறமிருந்து இப்பாலத்தின் வழியாக மறு புறத்திலுள்ள சிறைச் சாலைக்குக் கொண்டு செல்லப்பட்டார்கள். அக் கைதிகள் கடைசி முறை யாக நகரைப் பார்த்து விட்டு பெருமூச்சு விட்ட வாறே அப்பாலத்தின் மீது சென்றதால் இதற்கு இப் பெயர் வந்ததாம்.



## படப் புதிர்



இந்தப் படத்திலுள்ள குறை என்ன என்று கூறுங்கள் பார்க்கலாம். நன்றாகப் பாருங்கள்?

## வரலாற்றுப் பயணம்

கொலம்பஸ் புது உலகைக் கண்டு பிடிக்கக் கிளம்பிய 'சாண்டா மாரியா' என்று கப்பலின் படம் இது.

## படக் கேள்விகள்

1. இதில் 30க்கும் மேற்பட்ட முக்கோணங்கள் உள்ளன மொத்த முக்கோணங்கள் இதில் எவ்வளவு உள்ளன?





2. பதினேழு தீக்குச்சிகளால் ஆறு சமசதுரங்கள் உருவாக்கப்பட்டுள் ளன. தீக்குச்சிகளில் 5ஐ எடுத்து விட்டு 3 சதுரங்களே இருக்கும் படிச் செய்ய முடியுமா?

3. இந்த மிருகங்களில் எது நமக்கு தந் தத்தைக் கொடுக்கக் கூடியது?



## மூளைக்கு வேலை!



1. ஒருவர் ஆக்ராவிலிருந்து டில்லிக்குப் போகும் போது காற்றில்லாத டயருடன் சென்றதாக உணரவே இல்லை. இது எப்படி?

2. ஒரு நாய் ஒரு முளையில் ஒரு மீட்டர் நீளக் கயிறு கொண்டு கட்டப்பட்டுள்ளது. ஆனாலும் பிராணி மூன்று மீட்டர் தொலைவிலுள்ள எலும்புத் துண்டை எடுக்க முடிகிறது. எப்படி?




3. ஒரு திருடன் தான் தப்பிய காரை இந்தக் கார் வரிசைக்குள் விட்டு விட்டுப் போய் விட்டான். ஆனால் இன்ஸ்பெக்டர் ராமன் சற்று நேரத்திற்குப் பின் வந்து அந்தக் காரை கண்டு பிடித்துவிட்டார். எப்படி?



4. காது கேளாத ஊமை ஒருவன் ஒரு இரும்பு சாமான் கடைக்கு ஒரு சுத்தியல் வாங்க போனான். அவன் பேச முடியாததால் சைகை காட்டவே கடைக்காரன் அவன் என்ன விரும்புகிறான் என்று புரிந்து கொண்டான். இன்னொரு செவிட்டூமை வந்து திருப்புளி வேண்டுமெனச் சைகை செய்த போது கடைக்காரன் அதையும் புரிந்து கொண்டான். ஒரு பார்வையற்றவன் வந்து தனக்கு ரம்பம் வேண்டுமென்று கடைக்காரன் புரிந்து கொள்ள என்ன சைகை செய்வான்?

## செயல்முறை — துளிர் விடும் யானை!



### வேண்டிய பொருள்கள்:

ஒரு உருளைக் கிழங்கு, ப்ளாஸடிக் பட்டைக், நான்கு ஐஸ்க்ரீம் குச்சிகள், ஸ்பாஞ்ச் சிறுதுண்டு, கொத்தமல்லி விதைகள்

### முறைகள்:

1. ப்ளாஸ்டிக் பட்டையால் யானையின் துதிக்கை, கண், மூக்கு ஆகியவற்றைச் செய்து உருளைக் கிழங்கில் உரிய இடங்களில் வைக்கவும்.

2. ஐஸ்க்ரீம் குச்சிகளை யானையின் கால்கள் போலப் பொருத்தவும்.

3. உருளைக் கிழங்கின் மேல் பகுதியில் நடுவே ஓட்டை செய்து அதில் ஸ்பாஞ்ச் துண்டையும் கொத்தமல்லி விதைகளையும் வைக்கவும்.

4. சில நாட்களில் கொத்தமல்லி வளர்ந்து விடும். உருளைக்கிழங்கும் பக்கங்களில் வேர் விடும்.

வரைவோம்

# L லிருந்து சிங்கம்!



## பொன்மயமான பொழுதுகள் - 10ன்விடைகள்



### உலகில் எங்கு?

1. ஜப்பானில் புகழ் பெற்ற பூஜியாமாமலை.
2. மைன்மாரில் (பர்மா)
3. லண்டனில்
4. மடகாஸ்கர்
5. தென் ஆப்பிரிக்காவின் கிம்பர்லியில்

### கதைப் புதிர்:

'அம்மனிதனின் தலை பெரிது என ஹோம்ஸ் கூறியது சரியே. ஏனெனில் அந்தத் தொப்பி பெரிதாக இருந்தது. ஆனால் பெரிய தலைக்குள் பெரிய மூளை இருக்கும் என அவர் கூறியதுதான் தவறு. மனிதனின் அறிவு மூளையின் பருமனைப் பொறுத்து இருப்பதில்லை. அதன்படி ஹோம்ஸின் தலை அந்த மனிதனின் தலையை விடச் சிறியது என அந்தத் தொப்பி காட்டியது. ஆனால் ஹோம்ஸ் அறிவில் சற்றும் குறைந்தவர் அல்லவே!

### படப்புதிர்:

அந்த இந்தியர்களிடம் குதிரைகள் கிடையாது. ஸ்பானியர்கள்தாம் அமெரிக்காவிற்குக் குதிரைகளைக் கொண்டு வந்தார்கள்.

### படக் கேள்வி:

1. ஆர்சர் ஃபீஷ். அது தண்ணீர் பீய்ச்சி பூச்சிகளை விழ வைக்கிறது. 2. சாக்கடல். இது பெரிய ஏரி என்றாலும் கடல் என்றே அழைக்கப்படுகிறது. 3. போர்த்துகல்.




மரணத்தை விட மோசம் அவமானம் எனக்கருதிய துரியோதனன் தன் பரிவாரங்களோடு ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பலானான். வழியில் அவன் ஒரு குளக்கரையில் தங்கினான்.

போர்க் களத்திலிருந்து ஓடிப் போன கர்ணன் அங்குமிங்கும் திரிந்து துரியோதனன் உட்கார்ந்திருந்த இடத்திற்கே வந்தான். அவன் துரியோதனன் வெற்றி பெற்றுத்தான் திரும்பிக் கொண்டிருக்கிறான் என நினைத்து ''துரியோதனா! உன் பராக்கிரமத்தை என்னவென்று சொல்வது? கந்தர்வர்களையெல்லாம் தோற்கடித்து விட்டுத்தானே திரும்பிப் போய்க் கொண்டிருக்கிறாய்? அவர்கள் பொடிப் பயல்கள். எனக்குத் தொல்லைகள் கொடுத்ததால் விகர்ணனின் தேரில் ஏறிக் கொண்டு சென்று விட்டேன். உன்னைப் போன்ற வீரனை உலகில் வேறு எங்கும் காண முடியாது'' என்றான்.

இதைக் கேட்ட துரியோதனன அழாத குறையாக ''நான் போரில் வெற்றி பெற்றிருந்தால் புகழை அடைந்திருப்பேன். இறந்திருந்தால் வீர மரணத்தை அடைந்திருப்பேன். இந்த இரண்டும் நடக்கவில்லை. தோல்வியடைந்து அவமானப்பட்டேன். நான் ஹஸ்தினாபுரம் போக மாட்டேன். என் தந்தையையும் பீஷ்மரையும் துரோணரையும் கிருபரையும் அஸ்வத்தாமனையும் எந்த முகத்தை வைத்துக் கொண்டு பார்ப்பேன்? அவர்களிடம் நடந்ததை எப்படிக்கூறுவேன்? எனக்கு வாழ்க்கையே கசந்து விடடது. நான் இறந்து போகிறேன். இங்கேயே பிரயோபவேசம் செய்து கொள்கிறேன். நீங்களெல்லாம் ஹஸ்தினாபுரத்திற்குச் செல்லுங்கள் துச்சாதனனுக்குப் பட்டம் கட்டி அவனுக்குத் துணையாக நீங்களெல்லாம் இருந்து நாட்டை ஆளுங்கள்'' என துக்கம் மேலிடக் கூறிக் கண்ணீர்

**— கர்ணனின் திக் விஜயம்—**




சகுனியும் ''இதற்காகவா நான் சூதாட்டத்தில் பாண்டவர்களைத் தோற்கடித்து அவர்களது நாட்டை உனக்கு வாங்கித்தந்தேன்? பிராயோப வேசத்தைக் கைவிடு'' எனக் கூறினான். துரியோதனனோ யார் சொல்லியும் கேட்காமல் தர்ப்பைப் புல்லை விரித்து பிராயோபவேசத்திற்காக அதன் மீது அமர்ந்தான்.

தேவர்களிடம் தோற்ற ராட்சஸர்களுக்கு இது தெரிந்தது. அவர்கள் துரியோதனனைத் தம் பக்கம் சேர்த்துக் கொள்ள ஒரு ஹோமம் செய்தார்கள். அந்த ஹோமத் தீயிலிருந்து கிருத்தியை என்ற சக்தி வெளி வந்து ராட்சஸர்களிடம் ''நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டது. அவர்களும் ''பூவுலகில் துரியோதனன் பிராயோபவேசம் செய்து கொண்டிருக்கிறான். அவனை இந்தப் பாதாள லோகத்திற்குக் கொண்டு வந்து விடு'' என்றார்கள். கிருத்தியையும் துரியோதனனை அங்கு கொண்டு வந்து சேர்த்தது.

அவர்கள் துரியோதனனை அன்றிரவு முழுவதும் தம்மிடையே வைத்துக் கொண்டு ''உன் சிற்றரசர்கள் வீராதி வீரர்கள். நீயும் உத்தம க்ஷத்திரியன். க்ஷத்திரிய தர்மத்தை விட்டு பிரயோபவேசம் ஏன் செய்கிறாய்? இதற்கு உனக்கு தற்கொலை செய்து கொள்ளும் பாவமல்லவா கிட்டும்? இதனால் உனக்கு சுகமில்லை. உன் எதிரிகள் தாம் மகிழ்வார்கள். நீ சாதாரண மனிதனல்ல. போரில் உன் பக்கம் நின்று போராடுபவர்கள் எல்லாம் எங்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள். உன் நண்பன் கர்ணன் கூட நரகாசுரனின்

உகுத்தான்.

கர்ணன் அது கண்டு ''ஏன் இப்படி அழ வேண்டும்? அழுவதால் மட்டும் மனம் சாந்தி அடைந்து விடுமா? பாண்டவர்கள் உங்களை கந்தர்வர்களிடமிருந்து விடுவித்தார்களே என எண்ணி ஏன் மனம் ஒடிந்து போக வேண்டும்? அவர்கள் உன் குடி மக்கள். உன் உதவிக்கு வரவேண்டியது அவர்கள் கடமை. இதில் அவமானப்பட என்ன இருக்கிறது? இறந்து போவதாகக் கூறுகிறாயே. இதை உன் சிற்றரசர்கள் கேட்டால் உன்னைக் கோழை என்றே நினைப்பார்கள். பாண்டவர்களிடம் இருந்ததை எல்லாம் நீ எடுத்துக் கொண்டாய். அவர்கள் பிராயோபவேசமா செய்தார்கள்? இந்த மாதிரி பைத்தியக்கார எண்ணங்களை விட்டுவிடு'' என்றான்.

அம்சத்தைப் பெற்றவன். எனவே நீ மனம் தளராதே'' எனக் கூறி அவனை உற்சாகப் படுத்தினார்கள்.

இதன் பிறகு கிருத்தியை அவனை பூவுலகிற்குக் கொண்டு போய் அவன் முன்பிருந்த இடத்தில் விட்டது. துரி யோதனன் காலையில் கண் விழித்து தான் இரவில் கண்டது கனவோ என எண்ணினான். ஆனால் அவன் மனம் அப்போது உற்சாகத்தோடு இருந்தது. இந்நிலையில் அங்கு வந்த கர்ணன் அவனை ஹஸ்தினாபுரத்திற்குச் செல் லும் படி மீண்டும் அறிவுரை கூறவே, அதை ஏற்று அவன் தன் பரிவாரங்களு டன் அங்கிருந்து கிளம்பி ஹஸ்தினா புரத்தை அடைந்தான்.




தர்பாரில் பீஷ்மர் ''நாங்கள் சொன் னாலும் கேளாமல் நீ துவைத வனத் திற்குப் போனாய். போய் மூக்கறு பட்டு வந்தாய் தருமன் வந்து உன் னைக் காப்பாற்றினான். அவனது தயாள குணம் எங்கே? மண் குதிரை போல உள்ள இந்தக் கர்ணன் எங்கே? இவனை நம்பிப் போனாயே. இவன் உங்களை கந்தர்வர்களிடம் விட்டு விட்டு ஓடிப் போய் விட்டானே. இப் போதாவது இவனை நம்பாமல் பாண்டவர்களுடன் நட்புறவு கொள். அப்போது தான் உனக்கு நன்மை ஏற் படும்'' என்றார்.

துரியோதனன் உரக்கச் சிரித்துக் கொண்டே சகுனியையும் கர்ணனை யும துச்சாதனணையும் அழைத்துக் கொண்டு அச்சபையை விட்டு வெளி யேறினான். பீஷ்மர் கூறியது கர்ண னுக்கு அவமானமாக இருந்தது. அவன் துரியோதனனிடம் ''இப்போ தும் ஒன்றும் முழுகிப் போய்விட வில்லை. எனக்கு உன் படையைக் கொடு. நான் பீமன், அர்ஜுனன், நகுலன் சஹதேவன் ஆகியோரை வென்று தருமருக்குக் கொடுத்த நாடு களைக் கைப்பற்றி உனக்கு கொடுக் கிறேன்'' என்றான். துரியோதனனும் அதற்கு இணங்கி படையைக் கொடுத் தான்.

கர்ணன் படையோடு கிளம்பி முத லில் துருபதனைத் தோற்கடித்தான். அவனிடமிருந்து கப்பம் பெற்று அடுத்து அங்கம், வங்கம், கலிங்கம், மகதம், மத்ஸ்யம், கோசலம் முதலிய நாட்டு மன்னர்களை வென்று அவர் களிடமிருந்தும் கப்பங்களைப் பெற் றான். இதன் பின் தென் திசையில் சென்று பல மன்னர்களை வென்றான். குந்தினபுர மன்னன் ருக்மி அவனுடன் போர் புரியாமல் நட்புறவு கொண்



டான். இவ்வாறு ஏராளமான செல்வத்துடன் கர்ணன் ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பி வந்தான்.

துரியோதனன் கர்ணனைப் பாராட்டி ''பீஷ்மர், துரோணர், பாஹ்லிகன் போன்றவர்கள் இருந்தும் நீ எனக்குச் செய்த இந்த உதவி மிகப் பெரியது. அவர்கள் இவ்வாறு செய்ய வில்லை. இவ்வுலகில் உன்க்குச் சம மானவர் யாருமே இல்லை'' என்று புகழ்ந்தான். கர்ணன் திக் விஜயம் செய்து விட்டு வந்ததால் தானும் தருமரைப் போல ராஜசூய யாகம் செய்ய வேண்டுமென்று துரியோதன்ன் எண்ணினான். அதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு அவன் ருத்விக்ஞர்களை அழைத்து யாகத்தை ஆரம்பிக்கும் படிக் கூறினான்.

அவர்கள் அதற்கு ஆட்சேபணை செய்து ''பாண்டவர்களையும் வென்றால் தான் ராஜசூயயாகம் செய்ய முடியும். அப்போதும் கூட உன் தந்தை உயிருடன் இருக்கும் காரணத்தால் நீ ராஜசூய யாகம் செய்யத் தகுதி பெற வில்லை. நீ சக்கரவர்த்தி எனக் கூறிக் கொள்ள முடியாது. வேண்டுமானால் ராஜசூயத்திற்குச்சமமான வைஷ்னவ யாகம் உள்ளது. அதைச் செய்'' என்றார்கள்.

துரியோதனன் கர்ணன், சகுனி, துச்சாதனன் ஆகியோருடன்அது பற்றிக் கலந்து ஆலோசித்துவிட்டு வைஷ்ணவ யாகத்தையே செய்வதென முடிவு செய்தான். அதற்கான பிரமாண்டமான ஏற்பாடுகள் செய்யப் பட்டன. பல நாட்டு மன்னர்களுக்கு அழைப்புகள் போயின. யாகத்திற்கு வரும்படி தருமருக்கும் அவன் ஒரு தூதன் வாயிலாக அழைப்பு விடுத்தான்.

தருமரும் அத்தூதனிடம் ''துரியோதனன் இந்த யாகத்தைச் செய்வது எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது. ஆனால் நாங்கள் வந்து அதில் கலந்து கொள்ள முடியாது. ஏனெனில் நாங்கள் பனிரெண்டு வருட வனவாசத்தையும் ஒரு வருட அஞ்ஞாத வாசத்தையும் செய்தாக வேண்டும் என்பதற்குக்கட்டுப்பட்டிருக்கிறோம். எனவே நாங்கள் அங்கு வர முடியாது'' என்றார்.

ஆனால் பீமனோ ''நாங்கள் வன வாசத்தையும் அஞ்ஞாத வாசத்தையும் முடித்து விட்டு அங்கே வருவதாகச் சொல். அப்போது அந்த துரியோதனனை ஒரு ஆட்டுக் கடாவைப் பிடித்து பலியிடுவது போல வெட்டி

ஒருஅருமையான யாகம் செய்வோம் என்று அவனிடம் போய் நான் சொன்னதாகச் சொல்'' என்று கர்ஜித்தான். துரியோதனன் வைஷ்ணவ யாகத்தைச் சிறப்பாக நடத்தினான். கர்ணன் துரியோதனனைப் பாராட்டி ''இனி வரும் போரில் நான் பாண்டவர்களைக் கொன்று உன்னை ராஜ சூய யாகமும் செய்ய வைக்கிறேன்'' என்றார்.

பாண்டவர்கள் நீண்ட காலம் துவைத வனத்தில் இருந்ததால் அங்கு அவர்களுக்கு வேட்டையாட மிருகங்கள் மிகக் குறைந்து போயின. அதனால் பாண்டவர்கள் மீண்டும் காம்யக வனத்திற்கே சென்றார்கள். அங்கு அவர்களுக்குத் தேவையான உணவுப் பொருள்கள் கிடைத்தன. இப்படியாக அவர்களது வன வாசத்தில் பதினோறு ஆண்டுகள் முடிந்து விட்டன.

''தருமர் மனம் அப்போது தான் சூதாட்டம் ஆடியதை எண்ணி வருந்தியது. அதை ஆடாதிருந்தால் தானும் தன் தம்பிகளும் துரௌபதியும் இப்படியெல்லாம் கஷ்டப்பட்டிருக்க வேண்டாமே என அவர் எண்ணினார். அது மட்டுமல்ல இனியும் என்ன நடக்குமோ என எண்ணிக் கவலைப்படலானார். கர்ணன் போரில் பாண்டவர்களையெல்லாம் கொன்று விடுவதாக துரியோதனனுக்கு வாக்களித்தது வேறு அவரது மனதை வாட்டிக் கொண்டிருந்தது. இதையெல்லாம் நினைக்க நினைக்க அவருக்கு இரவு வேளைகளில் தூக்கமே வரவில்லை.

பாண்டவர்கள் காம்யக வனத்தில் இருக்கையில் வியாசர் அவர்களைக் காண வந்தார். அவர்கள் இளைத்துப் போனது கண்டு அவர் வேதனைப் பட்டாலும் அவர்களை உற்சாகப் படுத்தும் விதத்தில் பேசி அவர்கள் வனவாசத்தை முடித்த பின் வாழ்வில் வெற்றிகரமாக நடைபோட வேண்டுமென வாழ்த்தி விட்டுச் சென்றார். பாண்டவர்கள் இவ்வாறு காம்யக வனத்தில் இருக்கையில் அவர்களுக்கு எப்படித் தொல்லை கொடுப்பது என்று துரியோதனன் தன் நண்பர்களோடு கலந்து யோசிக்கலானான்.



அச்சமயத்தில் அவனைக் காண துர்வாச முனிவர் தம் சீடர்கள் பத்தாயிரம் பேர்களுடன் வந்தார். துரியோதனனுக்கு அவரது கோபம் பற்றி நன்கு தெரியும். ஏதாவது ஒரு சிறு குறை இருந்தாலும் பொறுக்காமல் சபித்து விடுவார். எனவே அவன் அவரையும்

அவரது சீடர்களையும நன்கு கவனித்து உபசரித்தான். அவர் எந்த வேளையில் எதைக் கேட்டாலும் அதை துரியோதனன் கொடுத்தும் வந்தான்.

துர்வாசரும் துரியோதனன் செய்த உபசாரங்களைக் கண்டும் அதில் எவ்விதக் குறையும் இல்லாததால் மகிழ்ந்தும் ''துரியோதனா! உன் உபசாரங்களைக் கண்டு மிகவும் மகிழ்ந்தேன். உனக்கு என்ன வேண்டுமோ கேள். கொடுக்கிறேன்'' என்று கூறினர். துரியோதனனும் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பாண்டவர்களைச் சிக்கலில் மாட்டிவிட்டு வேடிக்கைப் பார்க்க எண்ணி ''சுவாமி! இங்கு என் உபசாரங்களை ஏற்றது போல நீங்கள் காம்யக வனத்திற்குப் போய் என் சகோதரர்களான பாண்டவர்களின் உபசரிப்பை ஏற்று அவர்களை ஆசீர்வதிக்க வேண்டுகிறேன்'' என்றான்.

துர்வாசரும் அவ்வாறே செய்வதாகக் கூறித் தம் சீடர்களுடன் காம்யக வனத்திற்குக் கிளம்பினார். துரியோதனன் தன் மனதில் ''இவரைப் பாண்டவர்களால் திருப்திப் படுத்த முடியாது. கண்டிப்பாக அவர்கள் தவறு செய்வார்கள். அப்போது இவரும் கோபம் கொண்டு அவர்களைச் சபித்து விடுவார்'' என் எண்ணி மகிழலானான்.

காம்யக வனத்தில் துரெளபதி யாவருக்கும் உணவளித்துத் தானும் உண்டபின் அட்சய பாத்திரத்தை அலம்பிக் கவிழ்த்து வைத்து விட்டு படுத்தாள். அப்போதுதான் துர்வாசர் தம் சீடர்களுடன் அங்கு வந்து சேர்ந்தார். தருமர் தம் தம்பிகளோடு சென்று அவரை எதிர் கொண்டு அழைத்து வந்தார். அவருக்குத் தக்க மரியாதைகள் செய்து ''மகாத்மா! தாங்கள் தங்கள் சீடர்களுடன் இருந்து போஜனம் செய்ய வேண்டும்'' என வேண்டினார்.

துர்வாசரும் ''நானும் என் சீடர்களும் நதியில் நீராடிவிட்டு வருகிறோம்'' என்று கூறித்தம் சீடர்களுடன் கங்கை நதிக்குக் குளிக்கச் சென்றார். இவ்வளவு பேர்களுக்கும் எப்படி உணவு அளிப்பது என எண்ணி துரெளபதி திகைத்துப் போனாள். அப்போது தனக்கு வழி காட்டக் கிருஷ்ணர் இருக்கிறாரே என எண்ணி அவரை மனதில் தியானித்தாள்.



# அம்புலிமாமா செய்திகள்

## மிகப் பெரிய கிருஸ்துமஸ் கார்டு!

கேரளாவைச் சேர்ந்த லேகா எஸ். பாபு என்ற ஓவிய ஆசிரியை தம் பள்ளி நிர்வாகத்திற்கு கிருஸ்துமஸ் நல் வாழ்த்துக்களைத் தெரிவிக்க ஒரு வாழ்த்துத் கார்டு அனுப்பினார். அதன் முக்கிய நோக்கம் கடந்த ஆண்டில் அப்பள்ளியிலிருந்து நீக்கப்பட்ட 11 ஊழியர்களை மீண்டும் வேலைக்குச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே. மன்னித்து மறக்கும் கிருஸ்து போதனைப்படி நடக்கவும் வேண்டும் எனச் சுட்டிக் காட்டுவதே. அக் கார்டைப் பற்றிய சிறப்பு என்னவென்றால் அதன் நீளம் 1332 அங்குலம் (111 அடிகள்) அகலம் 11 அங்குலம். இதைத் தயாரிக்க 10 நாட்களில் 50 மணி நேரம் பிடித்ததாம்.



## நீளமான கேக்

யுனைடட் அரப் எமெரிட்ஸ் தோன்றி 25 ஆண்டுகள் முடிவடைந்ததும் அதற்கு வெள்ளி விழா கொண்டாடப்பட்டது. அதற்கு ஒரு பெரிய கேக் தயார் செய்தார்கள். அதன் நீளம் 2.5 கிலோ மீட்டர். நிறை 74 டன்கள். இரண்டு லட்சம் பேர்களுக்குப் போதுமானதாக இருந்த இந்தக் கேக் 50,000 பேர்களுக்குக் கூடப் போதவில்லையாம். அதை துபாய் கடற்கரையில் விழா நடத்தி வெட்ட வைத்தபோது மக்கள் கூட்டம் அதன் மீது விழுந்து ஆளுக்குக் கொஞ்சம் பிய்த்து எடுத்து கொண்டு ஒரு சில நொடிகளுக்குள் அது இருந்த அடையாளம் கூடத் தெரியாமல் செய்துவிட்டது. இதற்குக் காரணம் அதில் தங்க நாணயங்களும் ஆறு மெர்சிடிஸ் பென்ஸ் கார்களுக்கான சாவிகளும் உள்ளன என்று கிளப்பட்ட வதந்திதான். உண்மையில் இது ஒரே கேக் அல்ல. 5175 கேக்குகள் ஒன்றின் பக்கம் மற்றொன்றாக வைக்கப்பட்டிருந்தன. இதைத் தயாரிக்க 30;800 கி.கிராம் பழங்களும் 5,700 கி.கிராம் பேரீட்சம் பழமும் 8,600 கி.கிராம் மாவும் 67,300 முட்டைகளும் பல டன்கள் நெய்யும், சர்க்கரையும் பயன்படுத்தப்பட்டன. இவற்றை 28 ஹோட்டல்கள் 25 நாட்களில் தயாரித்தனவாம்.

## விற்பனை சாதனை

சென்ற ஆண்டில் புகழ் பெற்ற அமெரிக்கத் திரைப்பட நடிகை மெர்லின் மன்ரோவின் படம் கொண்ட தபால் தலைகள் வெளியிடப்பட்டதும் அந்த ஆண்டில் 46,000,000 தபால் தலைகள் விற்பனை ஆகின. 1993ல் புகழ் பெற்ற பாப் பாடகர் எல்வின் விரைஸ்லியை கௌரவிக்க தபால் தலைகள் வெளியிடப்பட்டன. மூன்று ஆண்டுகளில் 124,000,000 இந்த தபால்த் தலைகள் விலை போயின. தபால் தலை விற்பனையில் இது ஒரு புதிய சாதனையை ஏற்படுத்தியுள்ளது.

அம்புலிமாமா
அனுபந்தம்
101



நம் நாட்டுக்
கண்கவர் காட்சிகள்

# கம்பீரமான புரானா கிலா

நம் நாட்டுத் தலைநகரின் மையப்பகுதியில்தான் மகாபாரதத்தில் வரும் பாண்டவர்கள் வசித்து வந்த இந்திர பிரஸ்த நகரம் இருந்ததாகக் கருதப்படுகிறது. இந்த இடத்தில் தற்போது புரானாகிலா என்னும் கோட்டை உள்ளது. கி.பி. 1533ல் இரண்டாவது முகலாய மன்னர் ஹுமாயூன் காலத்தில் இதை தின் பன்னா என அழைத்தனர். அவருக்குப் பின் மன்னரான ஷெர்ஷா சூரி உயரமான மதில் சுவர் கொண்ட அரண்மனையைக் கோட்டை போலக் கட்டி அதைச் சுற்றி லும் வீடுகள் கட்டி ஆறாவது டில்லி நகரை நிர்மாணித்தார்.

இவர் கி.பி. 1540 - 45ல் இக்கோட்டையை மேலும் வலுப்படுத்தி அதற்கு 'ஷேர்ஷா கட்' என்று பெயரிட்டார். இவர் 1541ல் 'கிலா-இ-குன்ஹா' என்ற மசூதியையும் கட்டினார். டில்லியின் நான்காவது அடுக்கினுள் உள்ள இக்கோட்டைக்குள் தலீபா தலை வாசல் வழியாகத்தான் சென்றாக வேண்டும். உயரமான மதில் சுவருள்ள இக்கோட்டைக்கு எதிரே பலவித அதிசய வனவிலங்குகளுள்ள டில்லியின் அழகான மிருகக் கண்காட்சி சாலை உள்ளது.





கோட்டைக்குள் வரலாற்று தொல பொருள் ஆய்வுத் துறை நடத்திய தோண்டுதலில் கற்சிற்பங்களும், சமையல் பாத்திரங்களும் கிடைத்து உள்ளன. இவை 2000 ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டிலிருந்த பண்பாட்டையும் கலையையும் வெளிப்படுத்தி வரலாற்றிற்கு முக்கியமானவையாக விளங்குகின்றன.

# ஜெயகீஷ்வியர்

அழகிய காட்டில் ஒரு மலை அடிவாரப் பகுதி யில் தேவலர் என்ற முனிவர் ஒரு ஆசிரமத்தை அமைத்துக் கொண்டு தன் சீடர்களோடு இருந்து வந்தார். ஒருநாள் அவரது ஆசிரமத்திற்கு ஜெயகீஷ்வியர் என்ற முனிவர் விருந்தினராக வந்தார். தேவலரும் அவரது சீடர்களும் வந்த விருந்தினரின் தேவைகளை நிறைவேற்ற ஆவலாக இருந்தனர். ஆனால் அம்முனிவர் எதையுமே விரும்பியதாகத் தெரியவில்லை. எப்போது பார்த்தாலும் அமைதியுடன் புன்னகை பூத்த முகத்துடனும் அவர் விளங்கி வந்தார்.

'ஒருநாள் ஜெயகீஷ்வியர் தியானத்தில் அமர்ந்திருந்த போது தேவலர் கடலில் குளிக்கச் சென்றார். அப்போது அங்கு ஜெயகீஷ்வியர் கடலில் குளித்து விட்டுக் கரைக்கு வந்து கொண்டிருப்பதைக்கண்டு ஆச்சரியப்பட்டார். அவர் குளித்து விட்டுத் தம் ஆசிரமத்திற்குச் சென்றபோது அங்கு ஜெயகீஷ்வியர் தியானத் தில் முன்பு இருந்தது போல இருப்பதைக்கண்டு வியப்படைந்தார்.

மறுநாள் தேவலர் வேறொரு முனிவரின் ஆசிரமத்திற்குச் சென்றார். அங்கு தமக்கு முன் ஜெயகீஷ்வியர் வந்திருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார். அது மட்டுமல்ல, தேவலர் எங்கு சென்றாலும் அங்கு ஜெயகீஷ்வியர் இருப்பதைக் கண்டு வியப்படைந்தார்.

அவரால் தன் மனதில் ஏற்பட்ட ஐயப்பாட்டை அடக்க முடியாமல் ஜெயகீஷ்வியரிடமே தான் அவரை எங்கு சென்றாலும் பார்ப்பதற்கு என்ன காரணம் என்று கேட்டார். ஜெயகீஷ்வியரோ தமக்கு அது பற்றி எதுவுமே தெரியாது என்று கூறிவிட்டார்.

தேவலரோ அதற்கான விடையைத் தெரிந்து கொள்ள வேண்டுமென எண்ணித் தாம் சந்தித்த முனிவர்களிடமெல்லாம் தன் சந்தேகத்தைக் கூறி அதைத் தீர்க்குமாறு வேண்டினார். கடைசியில் ஒரு மாமுனிவர் இவ்வாறு அவருக்கு விளக்கினார் ''இவ்வுலகில் எங்கும் பரவியுள்ளது பிரம்மமே, எந்த இடமும், எப்பொருளும் பிரம்மத்தில் ஐக்கியமாகி உள்ளது. பிரம்மத்திற்கு வெளியே எதுவும் இல்லை. ஜெயகீஷ்வியர் தம் புலன்களை எல்லாம் அடக்கி வெற்றி பெற்று ஏகாக்கிர சித்தத்துடன் எப்போதும் தியானத்தில் மூழ்கி பரப்பிரம்ம சொரூபமான ஞானத்தில் ஆழ்ந்திருக்கிறார். உலகில் பிரம்மம் இல்லாத இடம் ஏது? நீங்கள் போன ஒவ்வொரு இடத்திலும் ஜெயகீஷ்வியரைக் கண்டதற்கு இதுவே காரணம்.''



## உங்களுக்கு தெரியுமா?

### அழகான புத்தாண்டு!

சுவிட்ஸர்லாந்தில் ஒரு சிறிய கிராமம் யூமாஷ். இங்கு ஆண்டுதோறும் ஜனவரி 13ல் புத்தாண்டு கேளிக்கைகள் நடைபெறுகின்றன. அன்று மனிதர்கள் மரங்களைப் போல் வேடம் பூண்டு ஆடியும் பாடியும் ஒவ்வொரு வீட்டிற்கும் போய் புத்தாண்டு வாழ்த்துக்களைத் தெரிவிப்பார்களாம். நார்கள், உலர்ந்த இலைகள் நத்தைக் கூடுகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட பொருள்கள் ஆகியவற்றைச் சிலர் அணிகிறார்கள். வேறு சிலர் புல், வைக் கோல், மரப்பட்டை ஆகியவற்றால் தயாரிக்கப்பட்ட ஆடைகளை இச்சமயம் அணிந்து கொள்கிறார்களாம்.



## வானவில்



### நறுமணம் தரும் ஊதுவத்திகள்!

ஒரு ஊதுவத்தியை ஏற்றி வைத்தால் ஒரு அறை முழுவதும் நறுமணம் பரவிவிடும். இவற்றைப் பூஜை அறைகளில் சுவாமி படங்களின் முன் ஏற்றி வைக்கிறார்கள். ஆலயங்களில் விக்கிரகங்களின் முன்னும் ஏற்றி வைக்கப்படுகிறது. நம் நாட்டில் 4,98,000 குடும்பங்கள் ஆண்டுக்கு 70 கோடி ரூபாய் மதிப்புள்ள ஊது வத்திகளை வாங்கி வருகிறார்கள். இவை முதலில் சந்தனம், ரோஜா, மல்லிகை ஆகிய மணங்களில் தான் தயாரிக்கப்பட்டன. இப்போது மசிலான் மகரந்த மரங்களைக் கொண்டும் இவை தயாரிக்கப்படுகின்றன. இப்போது ஐரோப்பிய நாடுகளில் இந்த வாசனைப் பொருளுக்கு நல்ல கிராக்கி உள்ளது. இம்மாதிரி வாசனைத் திரவியங்களுக்கும் பெயர் பெற்றுள்ள நாடு பிரான்ஸ்தான்.



# மனமே காரணம்

சுப்பய்யனுக்கு ஜலதோஷம், தொண்டைக்கட்டு, தலைவலி, லேசாகக் காய்ச்சல் இருந்தது. அவனால் எழுந்திருக்க முடியவும் இல்லை. அதனால் அவன் தன் மகனிடம் ''நீ நம் வைத்தியரிடம் போய் என் நிலைமையைக் கூறி மருந்து வாங்கிக் கொண்டு வா'' என்று சொல்லி அனுப்பினான். அவனது மகனும் போய் வைத்தியரைக்கண்டு அவர் கொடுத்த மருந்தைத் தன் தந்தையிடம் கொண்டு வந்து கொடுத்தான்.

அதைச்சாப்பிட்டும் சுப்பய்யனின் ஜலதோஷம், தலைவலி, உடம்பு வலி எதுவும் போகவில்லை. காய்ச்சல்தான் தணிந்தது. அவன் தன் மகன் வைத்தியரிடம் சரியாக சொல்லவில்லையோ என எண்ணி அவனே எழுந்து மெதுவாக நடந்து போய் வைத்தியரைக் கண்டான். அவரிடம் தனக்குள்ள வலிகளை எல்லாம் கூறவே வைத்தியரும் ''ஜலதோஷம் பிடித்தால் இந்த வலிகள் வரத்தான் செய்யும். அதற்குத்தான் மருந்தை உன் மகனிடம் கொடுத்து அனுப்பினேனே. வேறு மருந்து எதுவும் வேண்டாம். ஒருவாரகாலத்திற்கு எங்கும் அலையாமல் நன்றாகச் சாப்பிட்டு நான் கொடுத்த குளிகைகளை வேளா வேளைக்குச் சாப்பிட்டால் எல்லாம் சரியாகிவிடும்'' என்று கூறி அனுப்பி விட்டார்.

வைத்தியர் கூறியபடி ஒரு வாரம் ஓய்வு எடுத்தும் சுப்பய்யனின் வலிகள் போய்விடவில்லை. கொஞ்சம் குறைந்தன. ஆனால் அவன் ஒருநாள் தன் வீட்டுக் கொல்லைப் புறத்தில் வழுக்கி விழுந்து விட்டான். முழங்கால் பக்கம் சுளுக்குப் பிடித்துக் கொண்டது. வீட்டிலுள்ளவர்கள் விளக்கெண்ணெய் தடவி நீவி விட்டும், ஒத்தடம் கொடுத்தும் பார்த்தார்கள். சுளுக்கு போகவில்லை. பூசாரியைக் கூப்பிட்டு மந்திரித்துப் பார்த்தார்கள். சரியாகவில்லை. கட்டிலை

—சங்கர சுவாமிநாதன்—

விட்டு அசையாமல் அவன் கிடக்க வேண்டியதாயிற்று.

ஊரில் எல்லோருக்கும் சுப்பய்யன் வழுக்கி விழுந்து கட்டிலில் படுத்துக் கிடப்பது தெரிய வந்தது. அதனால் ஒவ்வொருவராக வந்து அவனைப் பார்த்து விட்டு ''ஐயோ பாவம்! நன்றாக நடமாடிக் கொண்டிருந்தவருக்கு இப்படி ஆகி விட்டதே'' என்று கூறித் தம் அனுதாபத்தைத் தெரிவித்து விட்டுச் சென்றார்கள்.

இதற்குப் பின் சுப்பய்யன் காதுக் குடைச்சலால் அவஸ்தைப் பட்டான். அடுத்து வயிற்று வலியால் கஷ்டப் பட்டான். பிறகு மார் வலி என்று சிரமப்படவே வைத்தியர் வந்து பார்த்து விட்டு ''இது உடம்பிலுள்ள வாய்வால் வருகிறது. பயப்பட எதுவும் இல்லை'' என்று கூறி மருந்து கொடுத்து விட்டுப் போனார். ஆனாலும் சுப்பய்யனுக்கு ஏதாவது ஒரு வலி இருந்து கொண்டே இருந்தது.

இப்படியாக அவன் ஒரு வருட காலத்தைக் கஷ்டப்பட்டவாறே கழித்தான். அவரது உடல் நிலை பற்றி ஊரெங்கும் பேசிக் கொண்டார்கள். இந்தப் பேச்சு அந்த ஊரோடு நில்லாமல் அடுத்த ஊர்களுக்கும் பரவலாயிற்று. சுப்பய்யனின் மைத்துனனுக்கும் இவ்விஷயம் தெரியவரவே அவன் தன் அத்தானைக் காணத் தன் ஊரிலிருந்து வந்தான்.

சுப்பய்யன் தன் மைத்துனன் ஆறுமுகத்திடம் தனக்கு வந்த வலிகளைப் பற்றி விவரமாகக் கூறினான். முடிவில் அவன் ''நான் நாளுக்கு நாள் பலஹீனமாகிக் கொண்டே இருக்கிறேன். எப்போது என்ன ஆகுமோ என்று கவலை



யாக இருக்கிறது'' என்று வருத்தப் பட்டவாறே சொன்னான். அதைக் கேட்ட ஆறுமுகம் ''அத்தான்! அப்படி மனம் தளர வேண்டாம். நீங்களென்ன கிழவரா? இப்போது தானே உங்களுக்கு ஐம்பது வயது ஆகிறது. அறுபது வயதுக்காரர்கள் கூட இன்னமும் திடமாக இருப்பதைப் பார்க்கிறோமே. நீங்கள் வீணாக மனதை அலட்டிக் கொள்கிறீர்கள்'' என்று ஆறுதல் கூறினாள்.

சுப்பய்யனோ ''இப்படி நீ ஆறுதல் சொல்லி விட்டதால் மட்டும் என் வலிகளெல்லாம் போய் விடுமா? ஒன்று மாற்றி ஒன்று என்று வந்து கொண்டே என்னை வாட்டுகிறதே. என்ன செய்வது? வருவதை எல்லாம் சகித்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு வழியில்லை'' என்று புலம்பினான்.



ஆறுமுகமும் ''இப்படி அலட்சிய மாக விட்டு விடக் கூடாது. அலட்சி யப் படுத்தினால் விபரீத விளைவு தான். எனக்கு ஒரு சிலர் அலட்சியப் படுத்தி உயிர் இழந்தது தெரியும். ராஜ பிளவை, க்ஷயரோகம் என்றெல்லாம் அவர்களுக்கு வந்தது. நோய் வெறும் மருந்தால் மட்டும் குணமடைவ தில்லை. அன்றாட வாழ்வில் சில சுகா தார விதிகளைக் கடைப் பிடிக்க வேண்டும்'' என்றான்.

சுப்பய்யனும் ''அப்படியா? அவை என்னவென்று சொல்'' எனவே ஆறு முகம் ''நான் வெளியில் பொது இடங் களில் உணவு உட்கொள்ள மாட் டேன். வீட்டில் கூட வயிறு புடைக்க உண்ண மாட்டேன். பண்டிகைகளி லும் விருந்துகளிலும் நிறையச் சாப் பிட்டு விட்டால் மறுநாள் பட்டினி கிடப்பேன். தினமும் வெகு தூரம் நடப்பேன. என் வேலைகளை நானே செய்து கொண்டு விடுவேன். எந்த வேலையையும் அவசரப்படாமல் நிதானமாகததான் செய்வேன். எதற் கும் பயந்து போய் விட மாட்டேன். செய்ய வேண்டிய வேலைகளைச் செய்து விட்டு அதன் பலன்களைக் கடவுள் அளிக்கட்டும் என இருப் பேன். என் அக்கம் பக்கத்தவர்களை வெறுப்பதில்லை. அவர்களை நம்பு கிறேன். அவர்கள் எனக்குக் கெடு தல் செய்தால் நான் விலகிச் செல் வேன். பழிக்குப் பழி வாங்க மாட் டேன். இவை உடல் நலனுக்கு நன்மை தருபவை எனக் கருதி நான் இவற்றின்படி நடப்பதால் என்னை எந்த நோய் நொடியும் அணுகுவ தில்லை'' என்றான்.

சுப்பய்யனும் ''சரி. நீ செய்கிறதை எல்லாம் நானும் இனி செய்கிறேன். என்னவோ என்னைத்தான் எல்லா வியாதிகளும் வாட்டுகின்றன'' என் றான். ஆறுமுகமும் ''நான் செய்வ தெல்லாம் மிகவும் கடினமானது என்று பலர் நினைக்கிறார்கள். அதை விட வியாதியால் அவஸ்தைப்படு வதே மேல் என்று அவர்கள் கூறுகிறார் கள். உங்கள் மனதைக் கட்டுப்படுத் திக் கொள்ளப் பார்க்கிறீர்கள் நான் செய்வதில் உங்களால் எதை எல்லாம் செய்ய முடியுமென்று யோசித்து செயல்படுங்கள். உங்களுக்கு நன் மையே ஏற்படும்'' என்றான்.

சுப்பய்யன் பலரைக் கேட்டான். அவர்களெல்லாம் அவனது தயவை நாடுபவர்கள். அதனால் அவர்கள் ''உங்களுக்கென்ன? நன்றாகத்தான்

இருக்கிறீர்கள்'' என்று கூறினார்கள். அவர்களிடம் கேட்டதில் பயனில்லை எனக்கண்டு ஊரில் மிகவும் முதிய வரான தன் வைத்தியரிடமே ஆறு முகம் சொன்னது பற்றிக் கேட்பது என எண்ணிக் கொண்டு அவரிடம் சென்றான்.

வைத்தியரோ ''இந்த ஊரில் அருணாசலம் தான் உடல் நலம் குன்றாமல் இருப்பவன். அவன் ஒரு முறை கூட என்னிடம் வைத்தியம் செய்து கொள்ள வந்ததே இல்லை'' என்றார். அருணாசலத்திற்கு வயது அறுபதிற்கு மேலிருக்கும். ஆனா லும் வாட்டசாட்டமாய் இருந்தான். எங்கு போக வேண்டுமானாலும் நடந்தே செல்வான். என்றும் ஒரு நோய் என்று அவன் படுத்ததில்லை.

சுப்பய்யன் அவனிடம் யோசனை கேட்க நினைத்து அவனைக் காணச் சென்றான். அவன் போன போது அருணாசலம் தன் வீட்டுத் திண்ணை யில் உட்கார்ந்திருந்தான் அவனைச் சுற்றிலும் சில பெரிய மனிதர்கள் உட் கார்ந்திருந்தார்கள். ஒருவர் அவனிடம் ''என் வீட்டில் ஒரு இசைக்கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்தேனே. நீங்கள் வர வில்லையே'' என்று கேட்டார்.

அருணாசலமும் ''கண்டிப்பாக வந்திருப்பேன். ஆனால் அன்று எனக்கு ஒரே இருமல். இசைக்கச்சேரி நடக்கும் போது நான் இருமிக் கொண்டே இருந்தால் கச்சேரி கெட்டு விடுமே என்றுதான் வராமல் இருந்து விட்டேன். தேனைத் தடவி கற்பூர வல்லி இலைகளை மென்று தின் றேன். இரண்டே நாட்களில் இருமல் போன இடம் தெரியவில்லை''



என்றான்.

இன்னொருவர் ''அடுத்த ஊரில் நடந்த என் தம்பியின் திருமணத்திற்கு வரவில்லையே'' எனவே அருணாசல மும் ''எனக்கு அன்று ஜலதோஷமும் தும்மலுமாக இருக்கவே நான் வர வில்லை. திருமணம் நடக்கும் போது நான் தும்மிக் கொண்டே இருந்தால் அது அபசகுனமாகத்தான் கருதப் படும். எனவே வரவில்லை. அதற் குக் கஷாயம் தயாரித்து சாப்பிட் டேன். ஜலதோஷம் போய் விட்டது'' என்றான்.

இப்படியே ஒவ்வொருவர் கேட்ட தற்கும் அருணாசலம் பதில் சொல்லிக் கொண்டே வந்தான். அப்போது சுப்பய்யன் அருணாசலத்திற்கும் தனக்கு வந்த வலிகள் வந்ததையும் அவற்றைப் போக்க அவன் வீட்டு

வைத்தியமே செய்து கொண்டதையும் கேட்டான். எல்லோரும் போன பின் நின்ற சுப்பய்யனைப் பார்த்து அருணாசலம் ''நீ என்ன கேட்கப் போகிறாய்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

சுப்பய்யனும் ''எனக்கு ஒரு சந்தேகம். நீங்கள் உங்களுக்கு இவ்வளவு நோய்கள் வந்ததாகக் கூறினீர்களே. அவ்வளவும் உண்மைதானா? நீங்கள் ஏதோ ஒரு சாக்கைச் சொல்லித் தட்டிக் கழிக்கவில்லையே'' என்று கேட்டான். அருணாசலமும் ''ஆமாம். அதெல்லாம் ஏதோ ஒரு சாக்குதான். எனக்கு எந்தவிதமான வியாதியும் வந்ததே கிடையாது நான் உடல் நலம் குன்றாமல் நன்றாகத்தான் இருக்கிறேன்'' என்றான்.

சுப்பய்யனும் ''இருமல் ஜலதோஷம் என்றெல்லாம் வந்ததாகக் கூறினீர்களே'' என்று கேட்கவே அருணாசலமும் ''மனிதனுக்கு ஜலதோஷம், தலைவலி என்றெல்லாம் அவ்வப்போது வரும். இதையெல்லாம் வியாதி என்று கூற முடியாது. வியாதி என்றால் க்ஷயரோகம், பெரியம்மை, ராஜபிளவை போன்றவை தான்'' என்றான். சுப்பய்யன் அவனை வணங்கி ''என் சந்தேகம் தீர்ந்தது. இந்த சிறு உபாதைகளையும் வலிகளையும் பற்றிக் கூறாமல் இருந்து விட்டாலே போதும் உடல் நன்றாக இருக்கிறது என்று தெரிகிறது. அவற்றை எல்லோரிடமும் எடுத்து கூறி நான் வேதனைப்பட்டுக் கொண்டிருந்ததுதான் நான் செய்த பெரிய தவறு என்பதை இப்போது உணர்கிறேன்'' என்றான்.

அப்போது அருணாசலம் ''சரி, இப்போது எனக்கு லேசாகத் தலை வலிக்கிறது. கொஞ்சம் தூங்கினால் அது போய் விடும். நான் உள்ளே போய்ப் படுக்கிறேன்'' என்று கூறி எழுந்தான்.

சுப்பய்யன் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தான். அதன் பின் அவனுக்குத் தலை வலி வயிற்று வலி, ஜலதோஷம் வந்த போதிலும் அதுப் பற்றி எல்லோரிடமும் கூறவில்லை. ஆர்ப்பாட்டமும் செய்யவில்லை. அதனால் எல்லோரும் ''சுப்பய்யன் ஆரோக்கியமாக நோய் நொடி இல்லாமல் இருக்கிறான்'' என்று கூறலானார்கள்.





# கடன் வசூலானது!

சின்னசாமி பரம ஏழை. எப்படியாவது பணம் சம்பாதித்து ஒரு நிலத்தை வாங்கி விவசாயம் செய்து மற்ற குடியானவர்களைப் போலத் தானும் தலை நிமிர்ந்து நடக்க வேண்டுமென விரும்பினான். ஆனால் அவன் எவ்வளவு சிரமப்பட்டாலும் ஏதோ வயிறார சாப்பிடுவதற்குப் போதிய பணம்தான் கிடைத்தது.

சரி, சந்தைக்குப் போய் வியாபாரம் செய்து லாபம் சம்பாதிக்கலாமென எண்ணி அவன் தன்னிடமிருந்த ஒரு மூட்டை ஆட்டு ரோமத்தை எடுத்துச் செல்ல நினைத்தான். ஊரார் அதைப் பார்க்கக்கூடாது என நினைத்து அதன் மீது காட்டுக்கொடிகளைக் கட்டி அந்த மூட்டையை எடுத்துக் கொண்டு அப்பகுதியில் நடக்கும் பெரிய சந்தைக்குச் சென்றான்.

சின்னசாமியைப் போலவே முத்துசாமி என்பவன் ஒரு மூட்டையில் சொரக்காய்களைக் கட்டி எடுத்துக் கொண்டு அந்த சந்தைக்கு வந்தான். இருவரும் சந்தைக்கு வெளியிலேயே சந்தித்து இருவரும் தம்மிடமுள்ள சரக்குகள் உயர்ந்தவை எனக் கூறி அவற்றை பண்ட மாற்று செய்து கொள்ளலாமா என்று பேசினார்கள். இருவரும் சரக்குகளுக்கு மதிப்புப் போட்டுப் பார்த்தார்கள். சின்ன சாமியின் சரக்கின் மதிப்பு முத்துசாமியின் சரக்கின் மதிப்பை விட கால் ரூபாய் அதிகமாக இருந்தது.

முத்து சாமி அப்போது தன்னிடம் பைசாக்கூட இல்லையென்றும் பிறகு கால் ரூபாயைக் கொடுப்பதாகக் கூறினான். சின்னசாமியும் ''சரி. அதைக் கடன் கொடுத்ததாக எண்ணிக் கொள்கிறேன். விரைவில் கொடுத்து விடு'' எனக் கூறி சொரக்காய் மூட்டையை எடுத்துக் கொண்டு தன் மூட்டையை முத்துசாமியிடம் கொடுத்தான்.

இருவரும் ஒருவரை மற்றவர் ஏமாற்றி விட்டதாக எண்ணி மகிழ்ந்

— கி. சுதா —



தார்கள். ஏனெனில் சின்னசாமி கொடுத்த ரோமத்தில் பாதி இத்துப் போயிருந்தது. முத்துசாமி கொடுத்த மூட்டைக்குல் சில அழுகிய காய்கள் இருந்தன! அவரவர்கள் தாம் ஏமாந்தது வெகு நேரத்திற்குப் பிறகுதான் தெரிந்தது. சின்னசாமியோ'' எப்படியும் எனக்கு அவன் கால் ரூபாய் கடன் கொடுக்க வேண்டுமே. அது லாபம் தானே'' என்று எண்ணி ஆறுதல் அடைந்தான். அதை வசூலிக்க அவன் முத்துசாமியின் ஊருக்கு சென்றான்.

முத்துசாமி அவ்வூர்ப் பணக்காரரிடம் வேலை செய்து வந்தான். அவன் சின்னசாமியைக்கண்டதும் ''என்னை ஏமாற்றி விட்டாய். இத்துப் போன ரோமத்தை உயர்தரச்சரக்கு என்று கூறி என்தலையில் கட்டிவிட்டாயே. இது சரியா?'' என்றான். அப்போது சின்னசாமி'' நீ மட்டும் என்ன செய்தாய்? மூட்டைக்குள் நல்ல காய்களுக்கிடையே அழுகல் காய்களை வைத்து என்னை ஏமாற்றவில்லையா? அப்படியானால் நீ ஏமாற்றியதற்கு நான் ஏமாற்றியது சரி போயிற்று'' என்றான். மேலும் ''நீ எனக்குக் கால் ரூபாய் கடன் திருப்பித் தர வேண்டுமே. அதை மறந்து விட்டாயா?'' என்று கேட்டான்.

முத்துசாமியோ ''ஓ! அதுவா? இப்போது என்னிடம் பணம் இல்லை. ஆனால் நாம் இருவரும் லாபம் அடையக் கூடிய விஷயம் ஒன்றைச் சொல்கிறேன் கேள். என் எஜமானனின் வீட்டுப் பின்புறத்தில் ஒரு பெரிய பள்ளம் உள்ளது. ஒருமுறை என் எஜமானர் அதற்குள் ஏணி வைத்த இறங்கியதைப் பார்த்தேன். அவர் அங்கு பணத்தை ஒளித்து வைத்திருக்க வேண்டும். இன்றிரவு நாம் அப்பள்ளத்தில்இறங்கி அதில் உள்ளதை எடுத்து சமமாகப் பங்கு போட்டுக் கொள்ளலாம்.'' என்றான்.

சின்னசாமியும் ''சரி. அதைச் செய்வோம்'' என்றான். அன்றிரவு முத்துசாமி ஒரு பெரிய சாக்குப் பையையும் நீளமான கயிறையும். ஒரு பருமனான இரும்புக் கம்பியையும் எடுத்து வர சின்னசாமி அவனோடு பணக்காரரின் வீட்டுப்பின்புறத்திலுள்ள பள்ளத்தின் பக்கம் சென்றான். முத்து சாமி இரும்பு முனையை ஓரிடத்தில் ஆழக்குத்தி நிறுத்தி அதில் கயிறைக் கட்டி பள்ளத்துள் விட்டான். பிறகு அவன் சின்ன சாமியிடம் ''நீ இங்கேயே நில். நான் பள்ளத்துள் இறங்கி அங்கே இருப்பதை இந்தப் பையில் போட்டு கயற்

றில் கட்டி விடுகிறேன். நீ கயிறை இழுத்து மூட்டையை எடுத்து இங்கே வைத்து விட்டுக் கயிறை மறுபடியும் உள்ளே விடு. அதைப் பற்றிக் கொண்டு நான் மேலே வந்து விடுகிறேன். பிறகு மூட்டையில் உள்ளதைப் பங்கு போட்டுக்கொள்ளலாம்'' என்றான்.

சின்னசாமியும் சரி எனவே முத்துசாமி பள்ளத்துள் இறங்கினான். ஆனால் அங்கு அவன் நன்கு தேடிப் பார்த்தான். புதையலோ பணப் பெட்டியோ பணப்பையோ எதுவும் இருக்கவில்லை. மண்ணைத் தவிர வேறெதுவும் இல்லை. அதைச் சொன்னால் சின்னசாமி தன்னை அப்பள்ளத்திலேயே விட்டுவிட்டுப் போய் விடுவான் என்று எண்ணி அவன் ''மூட்டையில் இங்கு கிடைத்த பணத்தைப் போட்டுக் கட்டுகிறேன். கயிறை இழு'' என்று கூறி சாக்குப் பைக்குள் தான் உட்கார்ந்து அதைக் கயிறால் நன்கு கட்டிக் கொண்டான்.

சின்னசாமி சிரமப்பட்டுக் கயிறை இழுத்து கனமான மூட்டையை ஒரு ஓரமாக வைத்து ''இதைத் தூக்கிக் கொண்டு ஓடி விடுகிறேன். இதில் உள்ளது அவ்வளவும் எனக்குத்தான். முத்துசாமி பள்ளத்திலேயே கிடக்கட்டும்'' என எண்ணி கயிறை முளையிலிருந்து அவிழ்த்து விட்டு மூளையைப் பிடுங்கி பள்ளத்துள் எறிந்தான். மூட்டையைக் கயறால் நன்கு சுற்றி அதைத் தன் முதுகில் சுமந்து கொண்டு அங்கிருந்து வேகவேகமாகச் சென்றான்.

கொஞ்ச தூரம் போனதும் அவன் களைத்துப் போகவே மூட்டையை



முதுகிலிருந்து கீழே இறக்கி ''அடேயப்பா! என்ன கனம் கனக்கிறது! இதில் ஒரே தங்கமும் வெள்ளியும்தான் இருக்கும். அந்தப் பயல் முத்துசாமி நன்றாக ஏமாந்தான்'' எனச் சற்று உரக்கக் கூறினான். மறுநிமிடமே முத்துசாமி மூட்டையின் கட்டுகளைத் தளர்த்திவிட்டு வெளியே வந்தான். அப்போது சின்னசாமி ''அட போக்கிரி! மறுபடியும் என்னை ஏமாற்றினாயா?'' என்று கேட்டான். முத்துசாமியும் ''நீயும் என்னை ஏமாற்றத் தானே நினைத்தாய். இருவர் செயல்களும் ஒன்றுக்கு மற்றது சரியாய்ப் போயிற்று'' என்றான்.

சின்ன சாமியோ ''என்ன இருந்தாலும் நீ கால் ரூபாய் கடனைத் தீர்த்தாக வேண்டும்'' என்றான். முத்து சாமியும் ''நான் கொடுக்க மாட்டேன் என்றா



சொன்னேன்? என்னிடம் இப்போது பணம் இல்லை. இருக்கும் போது வசூலித்துக் கொள்'' என்றான். அதன் பிறகு இருவரும் பிரிந்து சென்றனர்.

முத்துசாமி திருமணம் செய்து கொண்டான். அவன் மனைவி கொஞ்சம் பணத்துடன் வரவே அவன் பணக்காரரிடம் வேலை செய்வதை விட்டு விட்டு கொஞ்ச நிலம் வாங்கி விவசாயம் செய்து நல்ல லாபம் அடைந்து வீடு வாசலுடன் சுகமாக இருக்கலானான்.

சின்னசாமி பழைய நிலையிலே தான் இருந்தான். அவன் தன் கடனை வசூலிக்க முத்துசாமியின் ஊருக்கு வந்த போது அவன் நல்ல நிலையில் இருப்பதைக் கண்டான். முத்துசாமி சின்னசாமி வருவதைப் பார்தது விட்டான்.

அவன் தன் மனைவியிடம் ''அதோ வருபவன் என்னிடமிருந்து கடனை வசூலிக்க வருகிறான். நான் உள்ளே போய் இறந்தவனைப் போலக் கிடக்கிறேன். நீ என் பக்கத்தில் இன்று இருட்டும் வரை உட்கார்ந்து அழுது கொண்டிரு. மாலையானதும் அவனாகப் போய் விடுவான். பிறகு நான் எழுந்து விடுகிறேன்'' என்றான். அவன் மனைவியும் அவ்வாறே படுத்திருந்த தன் கணவன் பக்கத்தில் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தாள்.

சின்னசாமி வீட்டிற்குள் வந்தான் விஷயத்தைப் புரிந்து கொண்டு ''அடபாவமே என் ஆருயிர் நண்பன் முத்துசாமி இறந்து விட்டானா? நான் தகனக் கிரியகள் முடியும் வரை இருந்து விட்டுப் போகிறேன்'' என்று கூறி அவ் வீட்டுத் திண்ணையிலே உட்கார்ந்து விட்டான். மாலை ஆகியும் முத்துசாமியின் உறவினர் யாரும் வராதது கண்டு சின்னசாமி தெருவில் போகும் சிலரை அழைத்து ''இந்த வீட்டுக்காரன் இறந்து விட்டான். அவனுக்கு யாருமே இல்லை. நான் அவனுடைய வெகு நாளைய நண்பன். நீங்களும் கொஞ்சம் உதவினால் அவனது உடலைத் தூக்கிக் கொண்டு போய் சுடு காட்டில் போட்டு எரித்து விடலாம்'' என்றான்.

அவனுக்கு உதவ சிலர் முன் வந்தனர். முத்துசாமியின் மனைவியோ என்ன செய்வதெனத் தெரியாமல் தவித்தாள். சின்னசாமி மற்ற ஏற்பாடுகளில் முனைந்திருந்த போது அவள் தன் கணவனிடம் தாழ்ந்த குரலில் ''இப்போது என்ன செய்வது?'' என்று கேட்டாள். முத்துசாமியோ ''நடப்பது

நடக் கட்டும். நான் பார்த்துக் கொள் கிறேன். நீ கவலைப்படாதே'' என் றான்.

சின்னசாமி முத்துசாமியின் உட லைச்சுடுகாட்டிற்கு சிலர் உதவியுடன் கொண்டு வந்து விட்டான். அவர்கள் ''இனி உன் பாடு'' என்று சின்னசாமி யிடம் கூறி விட்டுப்போய் விட்டார் கள். சின்னசாமி சற்று தூரத்தில் மறைந்து நின்றான். அப்போது நான்கு திருடர்கள் தாம் திருடிய பொருள் களோடு அங்கு வந்தார்கள். அந்தப் பொருள்களைப் பங்கிட்டுக் கொள்ள எடுத்த போது அவர்களது தலைவன் அதில் ஒரு கத்தி இருப்பதைக் கண் டான்.

அவன் அதை எடுத்து ''இது எவ் வளவு கூர்மையாக இருக்கிறது என்று அதோ கிடக்கும் பிணத்தை வெட்டிப் பார்க்கிறேன்'' என்று கூறி முத்துசாமி யின் உடலை அணுகினான். உடனே முத்து சாமி எழுந்து ''ஏய் பிசாசுகளே! எங்கே போனீர்கள்? ஓடி வாருங்கள் நல்ல வேட்டை கிடைத்திருக்கிறது'' என்று கூறிப் பேயாட்டம் ஆடினான். திருடர்கள் பயந்து தம் பொருள் களை அப்படியே விட்டு விட்டு ஓடி விட்டார்கள்.

அப்போது சின்னசாமி ஓடி வந்து ''முத்து சாமி! நமக்கு நிறையப் பணம் கிடைத்திருக்கிறது. பங்கிட்டுக் கொள் வோம். இப்போதாவது என் கால் ரூபாய்க் கடனைக் கொடுப்பாயா'' என்று கேட்டான். இதற்குள் ஓடிப் போன திருடர் தலைவன் ஏதோ சந்தே கப்பட்டுத் திரும்பி வந்தான். அப் போது சின்னசாமி ''என் கடனை கொடு'' என்று முத்துசாமியிடம் வாக்குவாதம் புரிந்து கொண்டிருந் த்து அவன் காதில் விழுந்தது. இது ஏதோ பிசாசுகளின் சண்டை என எண்ணி பயந்து அவன் ஓடிப் போனான்.

முடிவில் சின்னசாமியும் முத்து சாமியும் சண்டையை நிறுத்தி சமாதானமாகப் போய் அப்பொருள் களை சமமாகப் பங்கிட்டுக் கொண்ட போது சின்னசாமி முத்துசாமியிட மிருந்து கால் ரூபாயை வசூல் செய்து கொண்டு தன் பங்குப் பொருள் களோடு தன் ஊருக்குப் போனான். அங்கு நிலம் வாங்கி அவன் தான் முன்பு விரும்பியபடி விவசாயம் செய்து வரலானான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 ஜுன் மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஏப்ரல் 30–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

**பிப்ரவரி மாதப் போட்டி முடிவு**

| | | |
|---|---|---|
| முதலாவது போட்டோ | : | **இயற்கையின் மடியில் பறவைகள்.** |
| இரண்டாவது போட்டோ | : | **செயற்கையின் பிடியில் மிருகங்கள்.** |
| பரிசு பெற்றவர் | : | **திரு. பி.எஸ். ராம்குமார், மதுரை–20.** |




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India), Controlling Editor: NAGI REDDI.